Regd. No 2975

ஸ்ரீ

# SRI RAMANUJAN

Editor : P. B. ANNANGARACHARYA, KANCHEEPURAM-3

# ஸ்ரீ ராமாநுஜன் — 278

ஆசிரியர் : P. B. அண்ணங்கராசாரியர்.

வருஷச் சந்தா ரூ. 10 ஜீவியச் சந்தா ரூ. 58



ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி •
தாழ்வாது மில்குரவர் தாம்வாழி •— ஏழ்பாரு
முய்ய வவர்க ளுரைத்தவைகள் தாம்வாழி •
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.

24—11—1971ல் வெளியிடப்பட்டது.

# VALUABLE BOOKS ON RELIGION AND PHILOSOPHY

| | | Rs. | Ps. |
|---|---|---|---|
| 1 | Lecture on the BHAGAVADGITA by Prof. M. Rangacharya in 3 Volumes : | | |
| | Vol. I ... ... | ... 15 | 00 |
| | Vol. II ... ... | ... 12 | 00 |
| | Vol. III ... ... | ... 12 | 00 |
| 2 | The SRIBHASHYA of Sri Ramanuja translated into English by Prof M. Rangacharya and M. B. Varadaraja Iyengar in 3 Volumes : | | |
| | Vol I ... ... | ... 15 | 00 |
| | Vol. II ... ... | ... 12 | 00 |
| | Vol III ... ... | ... 15 | 00 |
| 3 | The GITABHASHYA of Sri Ramanuja translated into English by M. R. Sampathkumaran | ... 15 | 00 |
| 4 | The RUPAVATARA of Dharmakirti, an elementary Sanskrit grammer based on Panini. Edited by Prof. M. Rangacharya In 2 Volumes : | | |
| | Vol. I ... ... | ... 5 | 00 |
| | Vol. II ... ... | ... 5 | 00 |
| 5 | Contribution of Yamunacharya to Visishtadvaita by Dr. M Narasimhacharya ... | ... 15 | 00 |
| 6 | Kalidasa's MEGHASANDESA, a critical appreciation by Prof. M. Rangacharya ... | ... 1 | 25 |
| 7 | TATTVATRAYA of Lokacharya translated into English by M. B. Narasima Iyengar ... | ... 1 | 00 |
| 8 | MUMUKSHUPPADI of Lokacharya, translated into English by M. B Narasimha Iyengar | ... 1 | 00 |
| 9 | Sri Ramanuja on the UPANISHADS by Prof. S. S. Ragavachar ... ... | .. in print | |
| 10 | TIRUPPAVAI of Sri Andal, translated into English by M. R. Sampathkumaran and M A. Srinivasan | ... 0 | 35 |

**M. C. KRISHNAN,**
EDUCATIONAL REVIEW BOOK DEPOT,
16, SUNKUWAR STREET,
TRIPLICANE, MADRAS-5.

# பிழை திருத்தம்

அடுத்துவரும் வியாஸத்தை கீழ்கண்ட திருத்தங்களைச் செய்து படிக்கும்படி பிரார்த்திக்கிறோம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 3 | 17 | [... மேலே காண்க] | [... ... மேலே பக்கம் 24 ல் காண்க] |
| 5 | 25 | 20 | 120 |
| 6 | 2 | நகர | நரக |
| 7 | கோஷ்டி படத்தின்கீழ் முதல் வரி | பகவந் காலக்ஷேபம் | பகவத்விஷய காலக்ஷேபம் |
| 9 | 32 | G. மாசில | G. மாசிலா |
| ,, | 35 | இத்நில | இந்நில |
| 10 | 8 | டில்லி சன்னிதிக்காகக் கொடுந்த | டில்லி சன்னிதிக்கான |
| 11 | 10 | அவர்கள் | இவர்கள் |
| ,, | ,, | ......, | ...... . |
| 12 | 23 | C. S | ஸ்ரீ C. S. |
| 12 | 24 | சுந்தரவரதாச்சார் | ஸ்ரீ சுந்தரவரதாச்சார் |
| 14 | 6 | விக்ர | விக்ரஹத்தை |
| ,, | 15 | தினங்களின் | தினங்களில் |
| 15 | 9 | காலத்திலிருந்தே | காலத்திலிருந்தே டில்லியில் |
| ,, | 19 | ஆனும் | ஆனல் |
| ,, | 33 | delete "1970-ம் வருடம்" | |
| 16 | 14 | உங்கள் | "உங்கள் |
| 19 | 25 | 000 | 1,000 |
| ,, | கடைசிக்கு முன்வரி | அண்ணங்கர | அண்ணங்கரா |
| 20 | 10 | "ஸ்ரீவைஷ்ண | "ஸ்ரீவைஷ்ணவ |
| 30 | 4 | ரரமானுஜ | ராமானுஜ |

ஸ்ரீ:



# டில்லியில் (1970 நவம்பரில்) மணவாளமாமுனிகள் ஆருவது நூற்ருண்டு நிறைவுவிழா வைபவம்

(ஸ்ரீமான் A. ராமாநுஜாசாரி, B.A., எழுதியது.)

## சாச்வத ஸ்மாரகமாக எம்பெருமானுர் திவ்யமங்கள விக்ரஹப் பிரதிஷ்டை

பெருமாள் ஆழ்வார் ஆசாரியர் இவர்களுடைய திருவவதாரோத்ஸவத்தை பக்தர்கள் வருஷந்தோறும் கொண்டாடி வருகிருர்கள். இந்த ரீதியில் பூர்வாசார்யர்களில் கடைக்குட்டி என்று போற்றப்படும் மணவாளமாமுனிகளுடைய திருநட்சத்திரம் ஐப்பசித் திருமூலத்தன்று கொண்டாடப்படுகிறது. ஆனுல் கடந்த சாதாரண வருஷ ஐப்பசித் திருமூலத்திற்கு ஒரு அசாதாரண சிறப்புண்டு. சாதாரண வருஷம் ஐப்பசித் திருமூலத்திற்குச் சரியான 1970-ம் வருஷம் நவம்பர் 3-ஆம் தேதி வரவரமுனி, ரம்யஜாமாத்ருமுனி என்று ஸம்ஸ்க்ருதத்தில் அழைக்கப்படும் மணவாளமாமுனிகள் இந்நில உலகில் அவதரித்து 600 ஆண்டுகள் பூர்த்தியாயின.

1970 ம் வருஷ ஐப்பசி திருமூலத்தின் தனிச்சிறப்பு



மணவாளமாமுனிகள்

அன்றே ப்ரபவ, விபவ என்று கணக்கிடப்படும் 60 ஆண்டுகளில் சாதாரண நாம சம்வத்ஸரம் பத்து ஆவர்த்தனம் ஆயிற்று. மாமுனிகளின் 6-வது நூற்ருண்டு பூர்த்தி சாதாரண வருஷத்தில் நேர்ந்தது ஒரு சரித்திர பூர்வமான சம்பவம். இவ்வரிய சந்தர்ப்பம் அடுத்தபடியாக 300 வருஷங்களுக்குப் பின்புதான் சம்பவிக்கும். ஆகையால் போன வருஷ ஐப்பசி திருமூலத்தை ஸ்ரீவைஷ்ணவர்கள் ஒரு பெரியவிழாவாகக்கொண்டாடினதில் ஆச்சரியமில்லை. தேசத் தலைநகரான டில்லியிலும் இவ் விழா வெகு விமரிசையாகக் கொண்டாடப்பட்டது. இவ்வரிய ஸம்பவத்தின் ஞாபகார்த்தமாக ஸ்ரீராமமந்திரம் என்ற சக்கரவர்த்தி திருமகன் திருக்கோயிலில் விசிஷ்டாத்வைத துரந்தரரான ராமானுஜருடைய திவ்ய மங்கள விக்ரஹப் பிரதிஷ்டை செய்யப்பட்டது. முதன்முதலாக டில்லி சரித்திரத்தில் எம்பெருமானுர் விக்ரஹப் பிரதிஷ்டைசெய்தது இப்போதுதான். இப் பெருமைவாய்ந்த புனித கைங்கர்யத்தின் வைபவத்தைக் கீழே தருகிரும்.

டில்லியில் நம் சம்பிரதாயத்தின் கொள்கைகளை அடிப்படையாகக் கொண்டு நடத்தப்படும் ஒரு சன்னிதியின் அவச்யத்தை உணர்ந்த ஸ்ரீபரமஹம்ஸேத்யாதி

ஸ்ரீ ஸ்ரீமந் நாராயண ஜீயர் சங்கல்பம்

ஸ்ரீ ஸ்ரீமந் நாராயண ராமாநுஜ ஜீயர் ஸ்வாமிகள் 1968-ம் ஹு ஜனவரி மாதம் 'வேதிக் கல்சர் சென்டர்' என்ற ஒரு சம்ஸ்தாவை ஏற்படுத்தி அதன் மூலம் சக்ரவர்த்தி திருமகனுக்கு ஒரு சன்னிதி நிர்மாணம்செய்ய சங்கல்பித்தார். இந்த சென்டருக்கு அடியேனை Founder Secretary யாக நியமித்தார். சன்னிதிகட்ட, இடத்திற்காக கவர்ன்மென்டாரை அணுகினோம். அவர்களும் லோதிரோட் க்ஷேத்திரத்தில் கால் ஏகரா விஸ்தீர்ணமுள்ள இடம் அளித்தனர். மேற்கொண்டு சன்னிதி நிர்மாண காரியத்தில் 'வேதிக் கல்சர் ஸென்டர்' முனைந்தது. அஸ்து



ஸ்ரீ ஸ்ரீமந் நாராயண ராமாநுஜ ஜீயர் உப ராஷ்ட்ரபதி ஸ்ரீ பாடக்குடன் சேவை சாதிக்கிறார்.

ஸ்ரீ ஜீயர் ஸ்வாமிகள் மாமுனிகள் 6-வது நூற்றாண்டு நிறைவு விழா நம் சன்னிதியிலேயே கொண்டாட ஏற்பாடு செய்யவேண்டுமென்று நிச்சயித்து ஸ்வாமியை தலைவராகவும் அடியேனை கன்வீனராகவும் கொண்ட ஒரு கமிட்டியை நியமித்தார். கமிட்டியும் விழாவின் முக்யத்வத்தை ஆஸ்திகர்களிடையே விளக்கவும் நிதி திரட்டவும் செயல்பட ஆரம்பித்தது. முதற்படியாக 1970-ம் வருஷம் ஜனவரிமாதம் 6-ம் தேதி "திருமூலதினம்" என்று மாஸ திருக்ஷத்திரம் கொண்டாடப்பட்டது. அது லக்ஷ்மீபாய் நகரில் ஸ்ரீ உ.வே. E. வைகுண்டம் அய்யங்கார் ஸ்வாமி திருமாளிகையில் சேவை, சாத்துமுறை, உபந்யாஸம், விசேஷ விநியோகங்களுடன் நடந்தது.

ஸ்ரீ வைகுண்டம் அய்யங்கார் ஸ்வாமியைப் பற்றி ஒரு வார்த்தை. இந்த

ஸ்ரீ வைகுண்டம் அய்யங்கார்

ஸ்வாமி ஸ்ரீவில்லிபுத்தூரைச் சேர்ந்த ஆசார்ய புருஷர். பரம சாத்விகர். ஆசார அனுஷ்டானம் நிறைந்தவர். டில்லியில் மத்திய கவர்ன்மென்டில் பெரிய உத்யோக பதவி வகித்தும் கர்வமற்றவர். தார்மிக கார்யங்களில் மிக உத்ஸாகத்துடன் பங்கெடுத்துக்கொள்வார். இவரை நம் ஜீயர் ஸ்வாமி மாமுனிகள் 600-வது ஆண்டு விழாக் கமிட்டியின் பொக்கிஷதாரராக நியமித்து கௌரவித்தார்.



E. VAIKUNTAM IYENGAR.

ஸ்ரீ R. T. கிருஷ்ண அய்யங்கார்

இவர் க்ருஹத்தில் நடந்த திருமூல உத்ஸவத்தில் பல ஸ்ரீவைஷ்ணவப் பெரியார்கள் கோஷ்டியை அலங்கரித்தனர். அவர்களில் சம்பிரதாய கைங்கரியங்களில் மிக ஊக்கமுள்ளவரும், மற்றவருக்கு உபகாரம் செய்வதையே தன் லட்சியமாகக் கொண்டவருமான ஸ்ரீவில்லிபுத்தூர் ஸ்ரீ R.T. கிருஷ்ணய்யங்காரைக் குறிப்பிடவேண்டும். [அவர் திருவுருவப்படம் மேலே காண்க.]

600-வது ஆண்டு பெருவிழா திட்டங்கள்

பிரசன்னமாயிருந்த ஸ்வாமிகள் 1970ம் வருஷம் நவம்பர் மாதம் 3-ஆம் தேதி வரும் மணவாள மாமுனிகள் 6-வது நூற்றுண்டு விழாவை கொண்டாடவேண்டிய திட்டங்களைப்பற்றி ஆலோசித்து, அடியேனுடைய கீழ்க்கண்ட யோசனைகளை ஆமோதித்தனர்.

(i) ப்ரதி மாஸம் 'திருமூல தினம்' ஏதாவதொரு காலனியில் கொண்டாடி 6-வது நூற்றுண்டு விழாவின் பெருமையை விளக்குவது; விழாவிற்கு நிதி திரட்டுவது;

(ii) மாமுனிகள் 600-வது ஆண்டு விழா ஸ்மாரகமாக ஸ்ரீ. உ. வே. மஹாவித்வான் காஞ்சீ ப்ரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசார்ய ஸ்வாமி ஆரம்பித்த பூர்வாசார்ய க்ரந்த ப்ருந்த—பிரசுர—திட்டத்திற்கு டில்லி ஸ்ரீவைஷ்ணவர்கள் சார்பில் யதாசக்தி காணிக்கை சமர்ப்பிப்பது;

(iii) தலைநகரில் மாமுனிகள் 6-வது நூற்றுண்டு பூர்த்தி விழாவின் சாச்வத ஞாபகார்த்தமாக எம்பெருமானுர் திவ்யமங்கள விக்ரஹத்தை பிரதிஷ்டை செய்து சன்னிதியும் தீர்மானிப்பது;

(iv) விழாவை 10 நாட்களுக்குக் குறையாமல் வேதபாராயண, திவ்யப் பிரபந்த சேவையுடன் மிக சம்பிரமமாகக் கொண்டாடுவது.

மேற்சொன்ன திட்டம் (i) க்கு அநுசரணையாக அடுத்த மாதங்களில் திருமூல தினம் கீழ்க்கண்ட இடங்களில் நடந்தது:

| | | |
|---|---|---|
| (1) 1970 | பிப்ரவரி 3உ | A. 230, பண்டாரா ரோட், அடியேனுடைய க்வார்ட்டர்ஸ். |
| (2) ,, | மார்ச்சு 2உ | செக்டார் IX 416, ராமகிருஷ்ணபுரம், ஸ்ரீ K R. பார்த்தசாரதி அய்யங்கார் திருமாளிகை. |
| (3) ,, | ,, 29உ | C 61, (49) மோதிபாக், ஸ்ரீ உவே. ரங்கசாமி அய்யங்கார் ஸ்வாமி திருமாளிகை. |
| (4) ,, | ஏப்ரல் 26உ | செக்டார் IV 547, ராமகிருஷ்ணபுரம் ஸ்ரீ உவே. R. K. சாரியார் திருமாளிகை. |
| (5) ,, | அக்டோபர் 20உ | (மஹாலக்ஷ்மி அர்ச்சனை) 11-A/25. W E A. கரோல்பபக், ஸ்ரீ உவே. P. V. S. அய்யங்கார் ஸ்வாமி திருமாளிகை. |

மேலே குறிக்கப்படாத மாதங்களில் திருமூல தினம் ஸ்ரீராம மந்திர ஸ்தலத்தில் நடந்தது.

ஒவ்வொரு திருமூல தினத்தன்றும் அர்ச்சனை, சேவை, சாத்துமுறை, விசேஷ விநியோகம் என்ற க்ரமத்தில் விமரிசையாகக் கொண்டாடப்பட்டது.

இனி திட்டம் (ii நிறைவேறின விவரம் :—

P.B A. ஸ்வாமியின் லட்சியம்

"எதிர்காலத்தில் நம் சந்ததியார்கள் ஆழ்வார் ஆசாரியர்களின் ஸ்ரீஸூக்திகள் கிடைக்கவில்லையே என்று ஏங்கக் கூடாது அதற்காக நம் பூர்வர்களுடைய எல்லா க்ரந்தங்களையும் என் வாழ்நாளில் பிரசுரித்துவிட முயலுவேன். இது என்னுடைய ஜீவிய லட்சியம்" என்று பலகாலும் ஸ்ரீ அண்ணங்கராச்சார் ஸ்வாமி சொல்லக் கேட்டுள்ளோம். இதுவரை ஆயிரத்துக் கதிகமாகவே க்ரந்தங்களை இயற்றிப் பிரசுரித்திருக்கிறார் நம் P. B A. ஸ்வாமி.

ஸ்ரீ P. B. அண்ணங்கராசார் ஸ்வாமியின் க்ரந்தமாலா பிரசுர திட்டம்

ஸ்ரீ ஸ்வாமி ஒரு பெரிய திட்டம் தயாரித்து அதன் பிரகாரம் பல லட்ச ரூபாய் செலவில் பூர்வாசார்ய கிரந்தங்களை அச்சடித்து அவைகளை மாமுனிகளின் 600 ஆண்டு பூர்த்தி ஞாபகார்த்தமாக வெளியிட நிச்சயித்திருந்தார் என்பதை முன்னமே சொன்னோம். இத்திட்டம் ஸ்ரீ பரமஹம்ஸேத்யாதி ஸ்ரீ ஸ்ரீமந் நாராயண ராமாநுஜ ஜீயருடைய பூர்ண ஆசியுடன் ஆரம்பிக்கப்பட்டது. தேவநாகரியிலும் தெலுங்கிலும் ஸ்ரீமத் பகவத் ராமானுஜ க்ரந்தங்


ஸ்ரீ P. B. A. ஸ்வாமி.

கள், தெலுங்குலிபியில் ஸ்ரீமத்வரவரமுநி ஸ்ரீஸூக்திகள், பூர்வாசார்ய ஸ்தோத்திர பாடங்கள், ஆளவந்தார் ஸித்தித்ரயம், ஸ்ரீபராசர பட்டருடைய ஸ்ரீபகவத்குண தர்ப்பணம் என்ற ஸஹஸ்ரநாம வியாக்யானம், இப்படி பல க்ரந்தங்கள் பிரசுரிக்கப்பட்டன. சாதாரணமாக, இப்படிப்பட்ட பெரிய காரியம் பல பண்டிதர்களைக் கொண்ட கமிட்டிகளால் பல வருஷ காலத்தில்தான் நடத்த முடியும். இந்த அமானுஷ்ய காரியத்தை ஸ்ரீ P. B A. ஸ்வாமி தவிர வேறு யாரால் செய்ய இயலும்?

ஸ்வாமி எடுத்துக்கொண்ட இந்த புனித கைங்கர்யத்தில் ஒவ்வொரு ஸ்ரீ வைஷ்ணவரும் பங்கெடுத்துக் கொள்ளவேண்டியது கடமையன்றோ? பங்கெடுத்துக் கொள்ளுவது பாக்கியமன்றோ? ஏற்கனவே நிச்சயித்தபடி டில்லி ஸ்ரீவைஷ்ணவர்கள் சார்பில் ஸ்ரீமணவாள மாமுனிகள் 600-வது ஆண்டு விழாக் கமிட்டி ஸ்ரீ P. B. A. ஸ்வாமிக்கு ரூ. 1000 காணிக்கையாக சமர்ப்பித்து க்ருதார்த்தர்களானுர்கள்.

அடுத்தபடியாக திட்டம் (iii) நிறைவேறிய விவரம் :—

எம்பெருமானுர் விக்ரஹப் பிரதிஷ்டை மாமுனிகள் 6-வது நூற்றுண்டு விழாவின் உபயுக்தமான ஸ்மாரகமாவது எப்படி? இதை ஸ்ரீ பரமஹம்ஸேத்யாதி ஸ்ரீ ஸ்ரீமந் நாராயாண ஜீயர் 10—8—70 தேதியிட்டு பதரியிலிருந்து விடுத்த அறிக்கையில் விளக்கியுள்ளார். அதன் சாராம்சமாவது ;

மாமுனிகள் இராமானுசனின் அபராவதாரம்

"எம்பெருமானுர் 120 ஸம்வத்ஸரம் இந்நில உலகில் எழுந்தருளியிருந்து பல ஆனைத்தொழில்களைச் செய்துமுடித்தார். ஆனுல் அவருடைய ஒருசில திட்டங்கள் பூர்த்தியடையவில்லை. அவைகளை ஸ்வாமியினுடைய அபிப்பிராயப்படி செய்து முடித்த பெருமை மணவாள மாமுனிகளைச் சேர்ந்தது. ஆகையாலிறே நம் பெரியோர்கள் மாமுனியை இராமானுசனின் அபராவதாரம் என்று கூறுவது. அப்படி அவர் நிறைவேற்றிய திட்டங்கள் சிலவற்றை கவனிப்போம்:

எப்பொழுது நரகம் விரும்பத்தக்கதாகும்?

"இராமானுசனுக்கு முன்னவதரித்த ஆசாரியர்கள் பொதுவாக ரஹஸ்யார்த்தங்களை ஓராண்வழியாய் உபதேசித்து வந்தனர். ஆனுல் உடையவர் இவ்வரம்பை அறுத்தெறிந்து "ஆசையுடையோர்க்கெல்லாம் ஆரியர்காள்! கூறும்' என்று ஆக்ஞாபித்தார். தாமும் இந்த கொள்கையை செய்துகாண்பித்தார். திருக்கோட்டியூர் நம்பியிடம் தாம் கற்ற திருமந்திர ரஹஸ்யார்த்தங்களை, ஆசாரியன்

ஆணையைமீறி, விரும்பிக்கேட்ட நூற்றுக்கணக்கானவர்களுக்கு உபதேசம் செய்தார். ஆசாரியன் ஆக்ஞையைப் பரிபாலனம் செய்யாததற்கு தண்டனை நகர ப்ராப்தி. அதனால் என்ன? நூற்றுக்கணக்கானவர் உஜ்ஜீவித்து மோக்ஷமடைவார்களல்லவா?

"இராமானுசனுடைய இந்த கொள்கைக்கிணங்க பின்வந்த ஆசார்யர்கள் முக்கியமாக பிள்ளை லோகாசாரியர் எல்லா ரஹஸ்யங்களையும் ஸூத்ர ரூபத்தில் தொகுத்து அஷ்டாதச ரஹஸ்யம் என்று சொல்லப்படும் 18 க்ரந்தங்களாக வெளியிட்டார். இந்த ஸூத்திரங்களை சரியான அர்த்தத்துடன் அறிந்துகொள்ளுவது சுலபமல்ல. பரம காருணிகரான மணவாளமாமுனிகள் இந்த ரஹஸ்ய க்ரந்தங்களில் முக்கியமானதான முமுக்ஷுப்படி, தத்வத்ரயம், ஸ்ரீவசனபூஷணம் என்பவைக்கும் பிள்ளை லோகாசார்யர் திருத்தம்பியார் அருளிச்செய்த ஆசாரியஹ்ருதயத்திற்கும் பல ஆதாரங்களுடன் விவரமான வியாக்யானம் செய்தருளினர். இவ்வியாக்கியானங்கள் ஸ்வாமியின் கரைகடந்த சாஸ்திரக்ஞானத்திற்கும், வேதம், ஸ்ரீபாஷ்யம், ஆழ்வார் திவ்ய பிரபந்தங்கள், பூர்வாசார்யர் அருளிய க்ரந்தங்கள் இவைகளில் ஆழ்ந்த பரிசயத்திற்கும் எடுத்துக்காட்டாக விளங்குகின்றன. வியாக்யானங்களின் சைலி நிகரற்றது. தெளிவும் அபேக்ஷிதார்த்தங்களை அணுவளவும் விடாமலும், ப்ரமாண வசனங்களை அபரிமிதமாக அடுக்கியும், மற்ற ஆசாரியர்கள் அபிப்ராயத்தை எடுத்துக்காட்டியும் எழுதும் மாமுனிகளின் வியாக்யானம் ஈடில்லாதது. "விசதவாக் சிகாமணி" என்று பெரியோர் இவருக்களித்த விருது சாலப்பொருந்தும்.

"இராமானுசனுடைய மற்றொரு மனோரதம் ஆழ்வார்களுடைய திவ்ய பிரபந்தங்களை—முக்கியமாய் திருவாய்மொழியை—எங்கும் பிரசாரம் செய்வது. பிரம்ம சூத்திரத்தில் தோன்றும் முரண்பாடுகளை திருவாய்மொழியில் நம்மாழ்வார் திருவாக்குக்களால் சமரஸப்படுத்தியுள்ளார் ஸ்ரீபாஷ்யகாரர். ஆழ்வார் திவ்ய பிரபந்தவ்களில் பதிந்து கிடக்கும் வேதார்த்தங்களை எடுத்துக்காட்டும் உரைகள் வெளிவர வேண்டுமென்றும் அவர் விரும்பினர். அவருக்குப்பின் அவதரித்த பேராசிரியர்கள் பலர் திருவாய்மொழிக்கு வியாக்யானங்கள் வெளியிட்டார்கள். இவைகளில் ஈடு வியாக்யானம் இணையற்றது. மாமுனிகள் ராமானுஜருடைய கொள்கைக்கிணங்க, ஈட்டு வியாக்யானங்களுடன் திருவாய்மொழியைப் பரக்க உபந்யஸித்தார். இதைத் திருச்செவிசாத்தின நம்பெருமாளும் அதிப்ரீதராய், அவரிடம் தமக்குள்ள ஆசார்ய பிரதிபத்தையை காண்பிக்க.

ரங்கநாதன் மாமுனிக்கு சிஷ்யனானது

"ஸ்ரீசைலேச தயாபாத்ரம் தீபக்த்யாதி குணார்ணவம்
யதீந்த்ரப்ரவணம் வந்தே ரம்யஜாமாதரம் முனிம்"

என்ற தனியனை சாதித்தார். வேறு எந்த ஆசாரியருக்கும் கிடைக்காத இத்தனிப்பெருமை மாமுனிகளுக்குத்தான் ப்ராப்தமாயிற்று.



மாமுனிகள் ஈடு முப்பத்தாறுயிரப்படியைக் கொண்டு பகவத் காலக்ஷேபம் செய்கிறார். திருவரங்கன் திருச்செவி சாத்துகிறார்.

"மாமுனிகள் தம் சிஷ்யர்களிடம் தம்முடைய விக்ரஹப்பிரதிஷ்டை செய்யவோ உத்ஸவங்கள் கொண்டாடவோ அனுமதிக்கவில்லை. எல்லாக் கௌரவங்களும் நம்மிராமானுசனுக்கே ஆகவேணும் என்று ஆக்ஞை பிறப்பித்தார். இதன்படி மாமுனிகளுடைய 600-வது ஆண்டு நிறைவு விழாவிற்கு ராமானுஜ விக்ரஹப் பிரதிஷ்டையைவிட வேறு ச்ரேஷ்டமான ஸ்மாரகம் என்ன இருக்கமுடியும்?

டில்லி விஜய ஸ்மாரகம்

"யதீந்த்ரருடைய திவ்ய சரித்திரத்தில் ஸ்வாமி டில்லி நவாப் சமஸ்தானத்திற்கு எழுந்தருளி செல்வப்பிள்ளையின் திவ்யமங்கள விக்ரஹத்தை மீட்டுக்கொண்டு வந்து மேல் கோட்டை என்ற திருநாராயணபுரத்தில் ஸ்தாபனம்செய்தார் என்பது குறிப்பிடப்பட்டிருக்கிறது. இந்த டில்லி விஜயத்திற்கு டில்லியில் ஒரு ஸ்மாரகமுமில்லை. ஆகையாலும் டில்லியில் எம்பெருமானார் விக்ரஹப்பிரதிஷ்டை செய்வது ரொம்ப பொருத்தமாகும்.

"இத்திட்டத்திற்கு ஸ்ரீபரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்யரான ஸ்ரீவானமாமலை ஜீயர் ஸ்வாமி, ஸ்ரீபரமஹம்ஸேத்யாதி திருப்பதி பெரியஜீயர், ஸ்ரீபரமஹம்ஸேத்யாதி ஸ்ரீபெரும்பூதூர் யதிராஜ ஜீயர், ஸ்ரீகாஞ்சீ. மஹாவித்வான் ப்ரதிவாதி பயங்கரம் அண்ணங்கராச்சாரியர் போன்ற நம் தரிசன ப்ரவர்த்தகர்களுடைய பூர்ண மங்களாசாஸனம் கிடைத்திருக்கிறது."

மேற்சொன்னவை ஸ்ரீபரமஹம்ஸேத்யாதி ஸ்ரீ ஸ்ரீமந்நாராயண ஜீயருடைய விளக்கம்.

1970 ஜூன் 7-ம் தேதி ஸ்ரீவில்லிபுத்தூர் ஆண்டாள் சன்னிதி ஜீர்ணோத்தாரணம் ஆகி சம்ப்ரோக்ஷணம் நடந்தது. ஸ்ரீ ஸ்ரீமந்நாராயண ஜீயர் அதில் அந்வயித்து அங்கிருந்து ஸ்ரீவானமாமலைக்குச் சென்றார். அடியேனுக்கும் அவரை

ஸ்ரீ வானமாமலை ஜீயருடைய நன்கொடை

முன்னிட்டுக்கொண்டு ஸ்ரீவானமாமலை ஜீயரை தண்டம் சமர்ப்பிக்கும் பாக்யம் கிடைத்தது ஸ்ரீ ஸ்ரீமந் நாராயண ஜீயரின் ஆக்ஞையின்பேரில் அடியேன் வானமாமலை ஜீயர் ஸ்வாமியிடம் தலைநகரில் உடையவர் சன்னிதி இருக்கவேண்டிய ஆவச்யகதையையும், அதற்கு நம் தரிசனத்தில் உன்னத பதவி வகிக்கும் வானமாமலை மடத்தின் சம்பந்தம் இருந்தால் யாவருக்கும் பெருமை தரக்கூடியதா யிருக்குமென்றும் விண்ணப்பித்து, தலைநகரில் பிரதிஷ்டை செய்யும் விக்ரஹம் ஸ்ரீபெரும்பூதூரில் கோயில் கொண்டிருக்கும் எம்பெருமானுர் விக்ரஹம்போல் பெரிய ஆகாரத்துடன் கம்பீரமாய் இருந்தால் ச்ரேஷ்டமாயிருக்குமென்று விளக்கி, பஞ்சலோக திவ்யமங்கள விக்ரஹத்தின் பூர்ண விலையையும் அவர் ஏற்க வேண்டுமென்று ப்ரார்த்தித்தேன். அப்போதைய மதிப்புப் பிரகாரம் இதற்கு ரூ. 3,000 வேண்டியிருந்தது. ஸ்ரீ ஜீயர் ஸ்வாமி மிக க்ருபைகூர்ந்து எங்களுடைய வேண்டுகோளுக்கு இணங்க ரூ. 3,000 கொடுக்க மடத்தின் அதிகாரிகளுக்கு உத்தரவிட்டார். டில்லி ஸ்ரீவைஷ்ணவர்களின் பாக்யமே பாக்யம்! அவர்கள் ஸ்ரீ வானமாமலை ஜீயருக்கு என்றென்றும் கடமைப்பட்டுள்ளனர். ஸ்வாமி பல்லாண்டு பல்லாண்டாக தர்சனப்ரவர்த்தனம் செய்துகொண்டு வாழ வேண்டுமென்று யாவரும் எம்பெருமானை பிரார்த்தித்தனர்.



ஆழ்வார் திருநகரி—குருகூர்ச்சடகோபன் (மாறன்); வலப்பக்கத்தில் மாறனடிபணிந்துய்ந்த இராமாநுசன். நம்மாழ்வார் நாதமுனிகளுக்குக் காட்டித்தந்த பவிஷ்யதாசார்ய விக்ரஹம் இந்தத் திருமேனியே என்பர். இந்தத் திருக்கோலத்தைத் தனிக்கோயில் நிர்மாணித்துத் திருப்பிரதிஷ்டை கண்டருளப்பண்ணி, மணவாளமாமுனிகளுக்கு ப்ராப்யமாகக் காட்டியருளினர் திருவாய்மொழிப்பிள்ளை. எதிராஜ விம்சதியை ஸ்வாமி விண்ணப்பித்தது இங்குதான்,

ஆழ்வார்திருநகரியில் வழிபடல்

வானமாமலையிலிருந்து ஸ்ரீ ஸ்ரீமந்நாராயண ஜீயருடன் திருக்குறுங்குடி சென்று, நம்பியை ஸேவித்து ஸ்ரீ பரமஹம்ஸேத்யாதி ஸ்ரீ திருக்குறுங்குடி ஜீயரையும் தண்டம் சமர்ப்பித்து டில்லியில் எம்பெருமானுர் விக்ரஹ ப்ரதிஷ்டை செய்யப்போவதை பிரஸ்தாபித்து அவருடைய மங்களாசாஸனத்தைப்பெற்று, ஆழ்வார் திருநகரியில் ஆழ்வாரையும் "பவிஷ்யதாசார்யர்" மணவாளமாமுனிகள், இவர்களேயும் வழிபட்டு அங்கு எழுந்தருளியிருக்கும் பரமஹம்ஸேத்யாதி ஸ்ரீ எம்பெருமானுர் ஜீயர் ஸ்வாமியின் மங்களாசாஸனமும் பெற்று, திருக்குடந்தை வழியாக சென்னை திரும்பினேம்

திருக்குடந்தையில் ஆராவமுதனை அடிவணங்கி, அவ்வூரில் டில்லி ஸ்ரீராம மந்திர்க்காக ஏற்கெனவே சக்ரவர்த்தி திருமகன் முதலான விக்ரஹங்கள் செய்வதற்கு ஆர்டர் கொடுததிருந்த ஸ்தபதியிடம் சென்று, வார்ப்படம் செய்திருந்த விக்ரஹங்களைப் பார்வையிட்டு, துரிதமாக வேலை நடக்கவேண்டிய அவச்யத்தை வற்புறுத்திவிட்டு வந்தோம்.

சென்னை திரும்பியதும் மஹாபலிபுரம் சென்று அங்கு பிரசித்தரான ஸ்ரீ ஷண்முக ஸ்தபதியிடம் ஏற்கெனவே ஆர்டர் கொடுத்திருந்த சுமார் 10 அடி உயரம் ஒரே கல்லில் அமைக்கப்பட்ட வீர ஆஞ்சநேயர் விக்ரஹ வேலை திருப்திகரமாக முடிந்திருந்ததைக் கண்டோம். விக்ரஹத்தில் சம்பிரதாயமாக இருக்கவேண்டிய சின்னங்களைப் பற்றியும், டில்லிக்கு விக்ரஹத்தை ஜாக்கிரதையாக அனுப்ப ஏற்பாடுகள் செய்யவேண்டியதைப் பற்றியும் ஸ்தபதிக்கு சில யோசனைகள் கூறினேம்.

டில்லி எம்பெருமானுர் திவ்யமங்கள விக்ரஹத்தின் சிறப்பு

எம்பெருமானுர் விக்ரஹம் செய்ய சென்னை மைலாப்பூரில் மிகவும் கைதேர்ந்த ஸ்தபதி திரு. G. மாசிலமணி அவர்களிடம் ஆர்டர் கொடுத்தோம். உடையவர் இத்நில உலகில் எழுந்தருளி யிருந்த காலத்திலேயே அவருடைய சிஷ்யர்களால் ஸ்வாமியினுடைய திவ்யமங்கள விக்ரஹம் முக்கியமாக மூன்று இடங்



எம்பெருமானுர் (ஸ்ரீபெரும்பூதூர்)

களில் ஸ்தாபிக்கப்பட்டது. ஸ்வாமி திருவவதரித்த ஸ்தலமான ஸ்ரீபெரும்பூதூரில் தானுகந்த திருமேனியாயும், அவர் 12 வருடம் ஏள்ளியிருந்த மேல்கோட்டை (திருநாராயணபுரத்தில்) தமருகந்த திருமேனியாயும், திருநாட்டுக்கு எழுந்தருளின க்ஷேத்திரமான ஸ்ரீரங்கத்தில் தானேயான திருமேனியாகவும் அர்ச்சாரூபத்தில் சேவை சாதிக்கிறார். ஸ்ரீபெரும்பூதூர் திவ்யமங்கள விக்ரஹத்தின் விசேஷம் என்னவென்றால் அதில் ஒவ்வொரு அவயவமும் எம்பெருமானாருடையது போலவே தத்ரூபமாக அமைந்துள்ளது.

டில்லி சன்னிதிக்காகக் கொடுத்த விக்ரஹமும் ஸ்ரீபெரும்பூதூர் திவ்யமங்கள விக்ரஹம்போல அதனுடைய அசல் நகலாக—உயரம், பருமன், அங்க அமைப்புகள், திருதண்டம், முதலியாண்டான் அமைய வேண்டுமென்பது ஸ்தபதிக்குக் கொடுத்த ஆர்டரில் முக்கிய ஷரத்து. ஸ்தபதியும் ஸ்ரீபெரும்பூதுருக்கு பலதடவை—முக்கியமாக திருவாதிரை தினங்களில்—சென்று திருமஞ்சனம் கண்டருளும்போது பூர்ணமாக சேவித்து, அவருடைய திருஉருவத்தை மனதில் அவகாஹித்து, விக்ரஹம் வார்ப்படம் செய்து அதை 3, 4 தடவை ஸ்ரீபெரும்பூதூருக்கு எடுத்துச்சென்று, ஸ்ரீபரமஹம்ஸேத்யாதி ஸ்ரீ யதிராஜ ஜீயர்ஸ்வாமியின் ஆலோசனையின் பேரில் சில திருத்தங்களைச் செய்தார். நகாஸ் வேலைகள் முடிந்த பிறகு ஸ்தபதிகள் மறுபடியும் விக்ரஹத்தை ஸ்ரீபெரும்பூதூர் ஏள்ளப்பண்ணிக்கொண்டு சென்றார். அங்கு பட்டாச்சார் ஸ்வாமிகளும் ஸ்ரீ ஜீயர் ஸ்வாமிகளும் அதை கடாக்ஷித்து ஒருமனதாக டில்லி விக்ரஹம் ஸ்ரீபெரும்பூதூர் எம்பெருமானார் திவ்ய விக்ரஹம் போலவே அமைந்திருக்கிறதென்று அபிப்பிராயம் கூறி, ஸ்தபதியையும் பாராட்டினர். ஸ்ரீ பரமஹம்ஸேத்யாதி ஸ்ரீ யதிராஜ ஜீயருக்கும் மற்றும் ஸ்ரீபாஷ்யகாரர் சன்னிதி பட்டாசார்களுக்கும் அவர்கள் செய்த உதவிக்கு ஸ்ரீவைஷ்ணவ உலகம் கடமைப்பட்டிருக்கிறது.



ஸ்ரீ எம்பெருமானார் (டில்லி)
மாமுனிகளும், பொன்னடிக்கால் ஜீயரும் அவர் திருவடியில் சேவை சாதிக்கின்றனர்.

குமாரி ஹேமமாலினி யின் உபகாரம்

டில்லிக்காகச் செய்யப்பட்ட பஞ்சலோஹ ராமாநுஜர் விக்ரஹத்தில் ரூ. 2,000க்கு அதிகமான பொறுப்புள்ள தங்கம் வெள்ளி சேர்க்கப்பட்டுள்ளது. இந்த கைங்கர்யம் நடன உலகத்தில் பிரசித்தி பெற்ற குமாரி ஹேமமாலினியும் அவருடைய திருத்தகப்பனுர் ஸ்ரீ V. S. R. சக்ரவர்த்தி அய்யங்காரும் செய்தனர். ஸ்ரீ சக்ரவர்த்தி அய்யங்கார், விக்ரஹம் வார்ப்படம் செய்ததினம் ஸ்தபதியோடு கூட இருந்து தன் கையாலேயே தங்கத்தையும் வெள்ளியையும் சேர்த்தது விசேஷம். சக்ரவர்த்தி அய்யங்கார் டில்லி ஆஸ்திகர்களுக்கு புதியவரல்ல. பலகாலம் ஸ்ரீவைஷ்ணவ சித்தாந்த சபை கார்யதரிசியாய் இருந்தார். அவர் குமாரியும் டில்லீ மதருஸி ஸ்கூல் மாணவியாய் இருந்தவர், இவர்களுக்கு எங்கள் நன்றி அவர்கள் இன்னும் பல கைங்கர்யங்கள் செய்துகொண்டு பல்லாண்டு வாழ்க.

ஸ்ரீபரமஹம்ஸேத்யாதி ஸ்ரீவானமாமலை ஜீயர்ஸ்வாமியினுடைய நன்கொடை ரூ. 3,000 பிரபல தொழிலதிபரான ஸ்ரீ G. D. ஸோமானி அவர்கள் மூலம் ஸ்ரீ மதுசூதன் ட்ரஸ்டின் நன்கொடை ரூ. 1000. இன்னும் சிலருடைய நன்கொடையோடு விக்ரஹம் ஏறியருளப்பண்ணி முடிக்கப்பட்டது.

ஸ்ரீ ராவ்பகதூர் அல்லத்தூர் நாதமுனி செட்டி சாரிடியார் சமர்ப்பித்த ரூ 1001 நன்கொடையை சக்ரவர்த்தி திருமகனுக்கு தோளுக்கினியான் செய்ய தனிப்பட உபயோகப்படுத்தப்படுகிறது ]

விக்ரஹத்தின் நுண்ணிய சிற்பக்கலை ரொம்ப உயர்ந்தரகமாக அமைந்திருக்கிறது. எம்பெருமானுர் விபவாவதாரத்தில் எழுந்தருளியிருந்தாப்போல் அர்ச்சையில் சேவை சாதிக்கும் அழகுதான் என்னே! திருக்கண்களும், திருமார்பும், தொங்கும் திருச்செவிகளும் திருவனந்தாழ்வான் படம் போன்ற முதுகும், நீண்ட திருக்கைகளும் சேவிப்பவர்கள் மனதுக்கு தெவிட்டாத இன்பமளிக்கும்.

மணவாள மாமுனிகள் திவ்ய மங்கள விக்ரஹம்

உடையவர் விக்ரஹத்துடன் கூடவே அவர் திருவடியில் சிறிய மணவாள மாமுனிகள் விக்ரஹமும், வானமாமலை மடத்தின்மூலமாகக் கிடைத்த ரூ. 3,000 நன்கொடைக்கு நன்றிகாட்டும் தருவாயில் மாமுனிகளின் எட்டு திக் கஜங்களில் முக்கிய ஜீயரான வானமாமலைமடம் மூலபுருஷர் ஸ்ரீ பொன்னடிக்கால் ஜீயர் விக்ரஹமும் ஸ்ரீமந்நாராயணஜீயருடைய ஆக்ஞைபிரகாரம் அமைக்கப்பட்டன.

மாமுனிகள் ஜீவியகாலத்திலேயே சிஷ்யர்கள் அவருடைய விக்ரஹபிரதிஷ்டை செய்ய விரும்பினர். ஆனுல் ஸ்வாமி இதற்கு அனுமதிதரவில்லை. ரொம்ப நிர்ப்பந்தத்தின்பேரில் தன் கையிலிருந்த சிறு செப்பு சொம்பைக் கொடுத்து அதனுல் செய்யக்கூடிய அளவில்தான் விக்ரஹம் இருக்கவேண்டுமென்று ஆக்ஞாபித்தார். ஸ்ரீரங்கத்தில் மாமுனிகள் சன்னிதியில் அர்ச்சாரூபத்தில் சிறிய திருமேனியாகவே சேவை சாதிப்பதை இன்றும் காணலாம் டில்லி கோயில் மணவாள மாமுனிகளும் அவருடைய நைச்யானுசந்தானத்திற்கனுகுணமாகச் சிறிய திருமேனியாகவே அமைந்தது விசேஷம்.

பெருமாளுடைய பாதுகைக்கு சடகோபனென்றும், சடகோபருடைய (அதாவது நம்மாழ்வாருடைய) பாதுகைக்கு இராமாநுசனென்றும் பெயர்.

முதலியாண்டான்

அதேமாதிரி இராமானுசனுடைய பாதுகைக்கு முதலியாண்டான் எனத் திருநாமம் வழங்குவது. ஸ்ரீபெரும்பூதூரில் எம்பெருமானுருக்கு இருக்கும் முதலியாண்டான்போலவே, அதன் நகலாகவே, பரமார்த்தபூஷணம் ஸ்ரீ நாதள்ள சம்பத்து செட்டி அவர்களால் ஒன்று செய்யப்பட்டு நன்கொடையாக சமர்ப்பிக்கப்பட்டது. ஸ்ரீ சம்பத்து செட்டி சென்னையில் பிரசித்த தங்க-வைர நகை வியாபாரி. பரம பாகவதோத்தமர். இவர் அநேகமாய் எல்லா கோயில்களுக்கும் திருப்பணி செய்துள்ளார்கள். இவர் பக்தி ச்ரத்தையுடன் ஸ்ரீமந் நாராயண் ஜீயரிடம் நன்கொடையாக சமர்ப்பித்த முதலியாண்டானை, ஸ்ரீ ஜீயர் ஸ்வாமி ஸ்ரீபெரும்பூதூரிலேயே சம்ப்ரோக்ஷணை செய்வித்து, எம்பெருமானுர் திருவடிகளில் மூன்று இரவு ஏள்ளப்பண்ணி யிருக்கச்செய்து, நவம்பர் 29-ம் தேதி ஆகாய விமானத்திலேயே எழுந்தருளப் பண்ணிக்கொண்டு வந்தார். ஸ்ரீ நாதள்ள சம்பத்து செட்டிக்கு நமது மனமார்ந்த க்ருதக்ஞதையை தெரிவிக்கிறோம்.



பரமார்த்தபூஷணம்
ஸ்ரீ நாதள்ள சம்பத்து செட்டி.

உபகாரகர்கள்

விக்ரஹங்கள் இவ்வளவு குறுகிய காலத்தில் பூர்த்தியாக உபகாரமாயிருந்தவர் C S பார்த்தஸாரதி (B A., B L.) அய்யங்காரும், விச்சந்தாங்கல் சுந்தரவரதாச்சார் ஸ்வாமியுமாவர். அடியேன் ஆபீஸ் நிர்ப்பந்தத்தால் பலநாள் மதருஸிலிருந்துகொண்டு சன்னிதி வேலைகளை கவனிக்க இயலாததால் இந்த ஸ்வாமிகளை அணுகி விக்ரஹ வார்ப்பட காரியத்தில் மேற்பார்வை யிடும்படி பிரார்த்தித்துக் கொண்டேன். அவர்களும் இக்கைங்கர்யம் செய்ய உத்ஸாகத்துடன் இணங்கினர். அவர்கள் டில்லி சன்னிதியின் மதருஸ் பிரதிநிதிகளாயிருந்து பலவிதத்திலும் உபகாரம் செய்தனர். அவர்கள் அடிக்கடி ஸ்தபதியை சந்தித்து வார்ப்பட வேலை குறுகியகாலத்தில் பூர்த்தியாம்படி உதவினர்.

ஸ்ரீ C S. பார்த்த சாரதி அய்யங்கார்

ஸ்ரீ C S பார்த்தசாரதி அய்யங்கார் டில்லி ஸ்ரீ வைஷ்ணவ சித்தாந்த சபையில் பலகாலும் நிர்வாகஸ்தராக இருந்தார். அவருடைய க்ருஹத்தில் மாமுனிகள் சாத்துமுறை Dr Sri K S கிருஷ்ணன் தலைமையில் நடப்பது வழக்கம். அவர் ரிடைர் ஆகி சென்னை சேர்ந்ததும் திருவல்லிக்கேணி பார்த்தசாரதி ஸ்வாமி கோயில்

டிரஸ்டியாக பல வருஷங்கள் கைங்கரியம் செய்தார். ஸ்ரீ பார்த்தசாரதி அய்யங்காரும் ஸ்ரீ சுந்தரவரதாச்சாரும் பல்லாண்டு பல்லாண்டாய் வாழ்ந்து நம் தரிசனத்திற்கு பல கைங்கர்யங்கள் செய்யவேண்டுமென்று லக்ஷ்மி நாராயணனை பிரார்த்திக்கிறோம்.

**திவ்யாலிங்கனம்**

பூர்த்தி ஆன எம்பெருமானுர் விக்ரஹத்தை வித்வான் ஸ்ரீ உ. வே. S. ஸ்ரீனிவாச அய்யங்கார் ஸ்வாமி மூலமாக நாங்குநேரிக்கு ஏள்ளப் பண்ணி கொண்டுபோய் அங்கு பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்யரான வானமாமலை ராமாநுஜ ஜீயர் ஸ்வாமி திருமுன்பு சமர்ப்பிக்கப்பட்டது. ஜீயர் ஸ்வாமி அந்த பெரிய திருமேனியைக் கடாக்ஷித்து "ஆஹா! எம்பெருமானுரே ஏள்ளியிருக்கிறப் போலிருக்கிறதே! அஹோ பாக்யம்!" என்று வாய்விட்டுச் சொல்லி ஆனந்தபாஷ்பம் பெருக்கி விக்ரஹத்தை அப்படியே ஆலிங்கனம் செய்துகொண்டார்.



வானமாமலை ஸ்ரீ ராமானுஜ ஜீயர் டில்லி உடையவர் விக்ரஹத்தை திவ்யாலிங்கனம் செய்தார். நின்ற திருக்கோலத்தில் அவர் பக்கத்தில் சேவை ஸாதிப்பவர்: ஸ்ரீ கோபாலய்யங்கார் (இப்போது இளைய ஜீயர்) வரிசை கடைசியில் வித்வான் ஸ்ரீனிவாசய்யங்கார் சேவை ஸாதிக்கிறார். மூன்ருவது ஸ்வாமி ஸ்ரீ கிருஷ்ணன்.

இது எம்பெருமானுர் காலத்தில் நடந்த ஒரு சம்பவத்தை ஞாபகமூட்டு கிறது. கந்தாடையண்ணனால் ஸ்ரீபெரும்பூதூருக்கு செய்விக்கப்பட்ட திவ்யமங்கள விக்ரஹத்தை எம்பெருமானுர் ஆலிங்கனம் செய்துகொண்டு தன் விசேஷ ஆன்மீய சக்தியை ஆவாஹனம் செய்தார். அதேபோல், ராமானுஜ தர்சன ப்ரவர்த்தகராய் நம் சம்பிரதாய மடாதிபதிகளில் ஞானவயோவிருத்தரா யெழுந்தருளியிருக்கும் பரமஹம்ஸ வானமாமலை ராமானுஜ ஜீயர் ஸ்வாமி டில்லி எம்பெருமானுர் விக்ர திவ்யாலிங்கனம் செய்ததால் அதற்கு விசேஷ புனிதத்தன்மை கிடைத்திருக்கிறது. ஜீயர் ஸ்வாமி பல்லாண்டு பல்லாண்டாக வாழ்க!

வித்வான் S. ஸ்ரீனிவாசய்யங்கார் விக்ரஹத்தை சென்னைக்கு திரும்பி ஏள்ளப் பண்ணரி திருவல்லிக்கேணி பக்தர்கள் வேண்டுகோளுக்கிணங்க அக்டோபர் 9, 10 தேதிகளில் வானமாமலை மடத்தில் அவர்கள் தர்சிக்க ஏற்பாடு செய்தார். அத் தினங்களில் "யதீந்த்திர ப்ரவண ப்ரபாவம்" என்ற விஷயத்தைப்பற்றி வித்வான் ஸ்ரீனிவாசய்யங்காரும், வித்வான் உ.வே கோபாலய்யங்கார் ஸ்வாமியும் உபந் யாசம் செய்து அங்கு நூற்றுக்கணக்காக வந்த பக்தர்களைப் பரவசப்படுத்தினுர்கள். (உ.வே. கோபாலய்யங்கார் அடுத்த சில தினங்களின் வானமாமலை மடத்தின் இளைய பட்டத்தை அலங்கரிக்கும் கௌரவம் பெற்ருர்.)

கீதாமந்திரத்தில் உத்ஸவம்

மதராஸ் ஜார்ஜ்டவுன் ஆஸ்திக பெருமான்களின் வேண்டுகோளுக் கிணங்க உடையவர் திவ்யமங்கள விக்ரஹத்தை அக்டோபர் 11-லிருந்து 25-ம் தேதி வரை வரதாமுத்தியப்பன் வீதியிலிருக் கும் **கீதாமந்திரத்தில்** ஏள்ளப்பண்ணி நித்யோத்ஸவம் கண்டருள ஏற்பாடாயிற்று. உடையவரை தரிசிக்க வந்த பக்தகோடிகளின் கூட்டம் சொல்லத் திறமில்லை அங்கு மஹாவித்வான் காஞ்சீ. ப்ரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசார்ய ஸ்வாமியும் ஏள்ளி மங்களாசாஸனம் செய்தது விசேஷம்.

புஷ்பத் திருத்தேரில் ஊர்வலம்

அக்டோபர் 25-ம் தேதி பரமஹம்ஸேத்யாதி ஸ்ரீமந் நாராயண ஜீயர் தலை மையில் மதருஸ் G. T.யில் நடந்த மாமுனிகள் 600 ஆண்டு பூர்த்திவிழா மாபெரும் ஊர்வலத்தில் புஷ்பங்களால் அலங் கரிக்கப்பட்ட திருத்தேரில் உடையவர் திருவீதிவலம் கண்டரு ளின வைபவம் கண்கொள்ளாக் காட்சியாயிருந்தது. அன்றே திவ்யமங்கள விக்ரஹம் தேசத் தலைநகருக்கு பிரஸ்தானமாயிற்று

தலைநகருக்கு எழுந்தருளல்

அக்டோபர் 28ந் தேதி நள்ளிரவு ஜனதா எக்ஸ்பிரஸ்ஸில் எம்பெருமானுரை ஏள்ளப்பண்ணிக்கொண்டு வித்வான் S. ஸ்ரீனிவாசய்யங்காரும் வானமாமலை மடம் ஜீயர் ஸ்வாமியின் பூர்வாச்ரம திருக்குமாரர் களில் க்ருஷ்ணன் ஸ்வாமியும் புதுடில்லி எழுந்ததருளினர். 900 வருடங்களுக்கு முன்பு ஸ்ரீ ராமாநுஜன் டில்லி விஜயம் செய்ததாக ஐதிஹ்யம் உண்டு; அதற்குப்பிறகு இப்போதுதான் முதன் முதலாக அர்ச்சா ரூபியாய் எழுந்தருளினுர். திவ்யமங்கள விக்ரஹம் தகுந்த மரியாதை

யுடன் வரவேற்கப்பட்டது. அந்த அகால வேளையிலும் பல வைணவபக்தர்கள் ஸ்டேஷனுக்கு எழுந்தருளி ஸ்வாகதோத்ஸவத்தில் கலந்துகொண்டனர். இவர்களில் ஸ்ரீ E. வைகுண்டம் அய்யங்காரைக் குறிப்பிடலாம். விக்ரஹத்தை நேராக அடியேனுடைய க்ருஹத்திற்கு ஏள்ளப்பண்ணிக்கொண்டு சென்றோம். விக்ரஹம் 84 கிலோ எடைக்கு மேலாகியதால் 3—4 ஸ்வாமிகளாலும் ஏள்ளப் பண்ணுவது கஷ்டமாயிருந்தது. அன்று முதன் முதலாக உடையவர் திருமேனியை சேவித்த எங்கள் உத்ஸாகத்திற்கு அளவேயில்லை: எம்பெருமானாரை நேரில் சேவிக்காத குறை அன்று நீங்கியதாக மனோபாவம்!

ஆங்கில அரசாட்சி காலத்திலிருந்தே தென்னிந்திய மேதாவிகள் பலர் சர்க்கார் அலுவலகங்களில் உயர்ந்த பதவிகளை வகித்து வருகின்றனர். சுமார் 5 வருடங்கள் முன்வரை, அவர்கள் உபநயனம், கல்யாணம் முதலிய சடங்குகள் செய்ய சென்னை பிராந்தங்களில் தங்கள் இருப்பிடங்களுக்குச் சென்று செய்வது வழக்கம். டில்லியில் நிரந்தரமாக வாழும் தென்னிந்தியர் துர்லபமாயிருந்தது ஆனால் இன்று காலம் மாறிவிட்டது டில்லியில் ஸ்ரீவைஷ்ணவ குடும்பங்கள் மாத்திரம் 1,500க்கு குறைவில்லை பலர் சொந்த வீடுகளைக் கட்டிக்கொண்டு இங்கேயே இருக்க திட்டமிட்டுள்ளனர். குடும்பத்தில் நடக்கும் கல்யாணம் முதலிய சடங்குகளை இங்கேயே நடத்துகிறார்கள். அதற்கு சௌகரி கரியங்களும் இருக்கின்றன. ஆனும் ஒரு குறைபாடு இருந்தது வாயினாற்பாடி மனத்தினால் சிந்திக்கவும், சிற்றஞ்சிறுகாலே வந்து சேவித்து "உன்பொற்றாமரை யடியே போற்றும் பொருள்கேளாய்" என்று விண்ணப்பிக்க தென்னிந்திய ஆசாரப்படி ஒரு சன்னிதியில்லாத குறையிருந்தது. தவிர, தக்ஷிணத்திலிருந்து ஒரு ஜீயர் ஸ்வாமியோ, மற்ற ஆசார சீலர்களோ டில்லி ஏள்ளினால் தங்க இடமும், கிணறு தீர்த்த வசதியும் இல்லாமலிருந்தது. இதையெல்லாம் உத்தேசித்து, பல அதிமானுஷ்ய கிருத்யங்களை செய்துள்ள பரமஹம்ஸேத்யாதி ஸ்ரீமந் நாராயண ஜீயர் ஏற்கெனவே முன்பு பிரஸ்தாவித்தபடி, தலைநகரில் சக்ரவர்த்தி திருமகன் சன்னிதி ஒன்று நிர்மாணிக்க சங்கல்பம் கொண்டார். ஸ்ரீவைஷ்ணவனுக்கு பகவத் நிஷ்டையைவிட பாகவத-ஆசார்ய நிஷ்டையிலேயே அதிக நோக்கு. "மதுரகவி சொற்படியே நிலையாகப் பெற்றோம்" என்று பெருமை கொள்கிறார் மாமுனிகள். ஆகையால் நிர்மாணிக்கும் சன்னிதியில் உடையவர் முதலான ஆசாரியர்களையும், ஆழ்வார்களையும் பிரதிஷ்டை செய்ய திட்டமிட்டார் ஜீயர் ஸ்வாமிகள். மத்திய அரசால் அளிக்கப்பட்ட நிலத்தில் தாற்காலிகமாக சன்னிதிகளை நிர்மாணித்து 1970-ம் வருடம் விக்ரஹங்களுக்கு ப்ராண பிரதிஷ்டையும் கோயில் சம்புரோக்ஷணமும், 1970 நவம்பர் 1-ந் தேதி நடத்த நாளிட்டார்

சன்னிதி நிர்மாணிக்க ஸ்ரீமந் நாராயண ஜீயரின் சங்கல்பம்

ஏற்கெனவே பிரஸ்தாவித்தபடி கும்பகோணத்தில் கைதேர்ந்த ஸ்தபதிகள் மூலம் ராமன்-லக்ஷ்மணன்-சீதை.ஹனுமான் உத்ஸவ மூர்த்திகள் செய்விக்கப்பட்டு அவைகளும், கூடவே மஹாபலிபுரத்தில் பூர்த்தியான வீர ஆஞ்சநேயருடைய மூல விக்ரஹமும் அக்டோபர் கடைசிவாரம் டில்லிவந்து சேர்ந்தன. ராஜ

தானியிலுள்ள நகரவாசிகள் மூர்த்திகளை தரிசிக்க ஹேதுவாய் இந்த திவ்யமங்கள விக்ரஹங்கள் மோடார் வாஹனத்தில் அலங்காரத்துடன் ஊர்வலமாக எடுத்துச் செல்லப்பட்டன. அச்சமயம் ஆயிரக்கணக்கான பக்தகோடிகள் மூர்த்திகளுக்கு மங்களார்த்தி சமர்ப்பித்து வழிபட்டனர். தென்னிந்தியர் அதிகமாக வசிக்கும் கரோல் பாக் என்ற பேட்டையில், விக்ரஹங்களை தரிசிக்கவந்த கூட்டம் சொல்லத்தரமில்லை.



டில்லி ஸ்ரீராம மந்திர் ஸீதாஸமேத ராமசந்திரன், லட்சுமணன், அநுமார், ராமாநுஜர்.

தோள்கண்டார் தோளேகண்டார் .. ..

விக்ரஹங்கள் அமைந்திருக்கும் அழகை ஆயிரம் நாபடைத்த ஆதிசேஷனுலும் வர்ணிக்க இயலாது. "தோள் கண்டார் தோளே கண்டார் ..............." என்ற கம்பன் பாசுரம் ஸ்ரீராமமந்திர் கோயிலில் எழுந்தருளியிருக்கும் கோதண்டராமனை கவி சேவித்துதான் எழுதினுனே என்று தோன்றும். அவ்வளவு அழகான அங்க அமைப்புகள். சீதாபிராட்டியின் மங்கள விக்ரஹம் அழகுத் தெய்வமாக விளங்குகிறது. 10 அடி உயரம் 4 டன் கனமுள்ள சிலையில் செதுக்கப்பட்ட ஆஞ்சநேயரின் விக்ரஹத்தில் காணும் நுண்ணிய கலைக் குவியல் தென்னிந்திய சிற்பக் கலைக்கே எடுத்துக்காட்டாகும். தன்னை வழிபடுபவர்களிடம் உங்கள் மனோரதம் நிறைவேறும்" என்று வாய்விட்டு ஆசி கூறுவதுபோல் தத்ரூபமாய் சேவை

சாதிப்பது என்னே! மேற்சொன்ன மூர்த்திகளைத் தவிர மதுரை அழகர் சன்னிதியிலிருக்கிருப் போல் ஸ்ரீராமமந்திர— சன்னிதியிலும் பக்தர்களின் கிரஹ பீடையை அகற்ற நவக்ரஹங்களும் கோயில் கொண்டிருப்பது ஒரு விசேஷம்.

நவக்ரஹங்கள்

கீழே பக்கம் 4-ல் கண்டுள்ள திட்டம் (iv) நிறைவேறின விவரம்:—

திவ்யமங்கள விக்ரஹங்களுக்கு ப்ராண பிரதிஷ்டையும் சன்னிதி சம்ப்ரோக்ஷணமும் 1970ம் ஆண்டு நவம்பர் 1-ந் தேதி காலை 7-லிருந்து 9 மணிக்குள் என்று முகூர்த்தம் நிச்சயிக்கப்பட்டிருந்தது. வைதிக சடங்குகள் முன் தினத்திலிருந்தே ஆரம்பமாயின. முகூர்த்த நாளன்று ப்ராதக்காலையிலிருந்தே வேதமும் திவ்ய பிரபந்தமும் கோஷிக்க பரமஹம்ஸேத்யாதி ஸ்ரீமந் நாராயண ஜீயர் ஸ்வாமி தலைமையில் மைசூரைச்சேர்ந்த ஆகமவித்வான்கள் ஸ்ரீ L கிருஷ்ணசாமி பட்டரும், ஸ்ரீ S நரசராஜ பட்டரும் சாஸ்திரோக்தமாக வேதிகள் வளர்த்தி வைதிக சடங்குகளை சுமார் ஆறுமணிநேரம் செய்து எல்லா மூர்த்திகளுக்கும் பிராண பிரதிஷ்டையும் தற்காலிகசன்னிதிகளுக்கு சம்புரோக்ஷணமும்செய்துமுடித்தனர். அன்று கோயிலில் கூடியிருந்த ஆஸ்திகர்களுடைய உத்ஸாகம் கட்டுக்கடங்கவில்லை. எள்ளு போட்டால் எள்ளு விழாது அவ்வளவு ஜனக்கூட்டம்!

திவ்ய மங்கள விக்ரஹங்கள் பிராண பிரதிஷ்டையும் சன்னிதி சம்புரோக்ஷணமும்



ஸ்ரீராம மந்திர் வரப்ரஸாதி ஆஞ்சநேயர்

அந்த முகூர்த்தத்திலேயே உடையவர் சன்னிதிக்கு அஸ்திவாரக்கல்லை ஸ்ரீ வாஸுதேவ சோமானி நாட்டினர். இச் சன்னிதி கட்டிடச் செலவு முழுவதையும் அவர் ஏற்பதாக அறிவித்து முதல் தவணையாக ரூ. 10,000 (பதினாயிரம்) சமர்ப்பித்தார்.

உடையவர் சன்னிதி அஸ்திவாரக் கல்

ஸ்ரீ ஜீயர் தீர்த்த பரிக்ரஹம்

பிறகு நூதன சன்னிதியில் முதல் சாத்துமுறை, தீர்த்த பிரஸாத விநியோகம் நடந்தது. "நம்பிள்ளை கோஷ்டியோ, நம்பெருமாள் கோஷ்டியோ" என்று பிரசித்தம். அன்று டில்லி கோயிலில் குழுமியிருந்த பக்தர்களின் கோஷ்டி நம்பிள்ளை நம்பெருமாள் கோஷ்டியாகவே சேவை சாதித்தது விசேஷம். ஸ்ரீவைஷ்ணவக் குழாங்களின் வேண்டுகோளுக்கிணங்க பரமஹம்ஸேத்யாதி ஸ்ரீமந் நாராயண ராமானுஜ ஜீயர் தீர்த்த பரிக்ரஹம் செய்தார். பிறகு கோஷ்டி தீர்த்த விநியோகம் நடந்தது.

பொதுக்கூட்டம்

வைதிக சடங்குகள் பூர்த்தியானதும் ஒரு பொதுக்கூட்டத்திற்கு ஏற்பாடாகியிருந்தது. விழாவிற்கு விஜயம் செய்த மத்திய அரசாங்க (அப்போதைய) மந்திரி ஸ்ரீ சத்யநாராயண ஸின்ஹா கூட்டத்திற்குத் தலைமை வகித்தார். ஸ்ரீ K. L ராவ் முதலான மந்திரிகளும் ப்ரமுகர்களும் நூற்றுக்கணக்கில் பிரஸன்னமாயிருந்தனர். ஜீயர் ஸ்வாமியினுடைய மங்களாசாஸனத்துடன் கூட்டம் ஆரம்பித்தது. கோயில் காரியதரிசி என்ற ஹோதாவில் அடியேன் யாவருக்கும் ஸ்வாகதம் கூறி, அன்று டில்லி ஆஸ்திக உலக சரித்திரத்தில் பொன்னால் பொறிக்கவேண்டிய நாள் என்பதை விளக்கினேன். ஸ்ரீ சத்யநாராயண ஸின்ஹா அவர்கள் மூர்த்தி பூஜையின் அவசியத்தைப்பற்றி துளசி-ராமாயணம் முதலிய காவ்யங்களிலிருந்து மேற்கோள்களை யெடுத்துக் காட்டி அழகாக ஹிந்தியில் சொற்பொழிவாற்றினர்.

அடுத்தபடியாக "மணவாள மாமுனி 600வது ஆண்டு விழாக் கமிட்டி, புது டில்லி"யின் சார்பாக, ஸ்ரீ வாஸுதேவ ஸோமானி, இவ்விழாவின் சாச்வத ஞாபகார்த்தமாக ப்ரதிஷ்டை செய்யப்பட்ட ஸ்ரீ எம்பெருமானர் திவ்யமங்கள விக்ரஹத்தை, ஸ்ரீராம மந்திர்-கோயிலை நிர்வகிக்கும் 'வேதிக் கல்சர் சென்டர்'க்கு சமர்ப்பிக்கப்பட்டதாக சம்பிரதாயமாக அறிவித்தார். ஸ்ரீ ஜஸ்டிஸ் R L. நரசிம்மன் வந்தனோபசாரம் கூற பிரசாத விநியோகத்துடன் இன்றைய நிகழ்ச்சி 'ஜீயர் ஸ்வாமிக்கு ஜே" என்ற கரகோஷத்துடன் முடிவடைந்தது.

டெலிவிஷனில் சம்புரோக்ஷண காட்சி

இன்று நடந்த ஸ்ரீராம மந்திர்-சம்ப்ரோக்ஷண விழா டில்லியில் ஒருபெரிய நிகழ்ச்சியாதலால் அதை All India Radio வைச் சேர்ந்த டெலிவிஷன் டிபார்ட்மென்ட் ரிகார்ட் செய்தது. அன்று சாயங்காலமே டில்லி பூராவும் ஆயிரக்கணக்கான மக்கள் கண்ணுறும்படி டெலிவிஷனில் காண்பித்தது குறிப்பிடத்தக்கது.

உபந்யாஸ மாலிகை

மாமுனிகள் திருவவதாரோத்ஸவத்தையொட்டி நவம்பர் 2ம் தேதியிலிருந்து 10 நாட்களுக்கு பால பண்டிதமணி ஸ்ரீ ஸ்ரீரங்கம் திருமலாச்சாரின் உபந்யாஸம் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. உபந்யாஸ மாலிகையை, ஜஸ்டிஸ் R. L. நரசிம்மன் அவர்கள "ஸ்ரீராமாயணம்" என்ற விஷயத்தைப்பற்றி சமஸ்கிருதத்தில் பேசித் துவக்கி வைத்தார்,

நவம்பர் 3ந் தேதி. இன்று மணவாள மாமுனிகளின் 601வது திருவவதார தினம். இப்புனித நாள் பாரததேச முழுவதும் பெரும் விழா வாகக் கொண்டாடப்பட்டது. தலைநகரில் கொண்டாடின வைபவத்தை இங்கு அனுபவிப்போம்.

மாமுனிகள் 601வது திருவவதாரோத்ஸவம்

அதிகாலையிலேயே பல ஸ்வாமிகள் உத்ஸவ உபக்ரமத்தில் அந்வயிக்க த்வாதசோர்த்வ புண்ட்ரங்களுடன் ஏள்ளியிருந்தனர். ஸ்ரீராமபிரான், உடையவர் மற்றும் எல்லோரும் திருமஞ்சனம் கண்டருளினர். வேதாரம்பம், திவ்யபிரபந்த தொடக்கம், திருப்பாவை சாத்துமுறை, பிரஸாத விநியோகம் என்ற அடைவில் உபக்ரமம் நடந்தேறியது. மஹாசாரியனுக்கு தங்கள் அஞ்சலியை சமர்ப்பிக்க நகரின் நாலு பக்கங்களிலிருந்தும் நூற்றுக் கணக்கான ஸ்ரீவைஷ்ணவர்கள் கோஷ்டியை அலங்கரித்தனர்.

அன்று மாலை விசேஷ பந்தலில் பெருமாள், சீதாபிராட்டி இளைய பெருமாளுடன், உடையவர்-மாமுனிகள் இவர்களுக்கு மங்களாசாஸனம் செய்ய அலங்கார பூதர்களாய் மண்டபத்தில் எழுந்தருளியிருந்து ஆழ்வார் பாசுரங்களைத் திருச்செவி சாய்த்தனர். பிறகு பரமஹம்ஸேத்யாதி ஸ்ரீமந் நாராயண ஜீயர் ஸ்வாமி தலைமை வகித்து மணவாள மாமுனிகள் 6வது நூற்றுண்டு விழாவை உத்காடனம் செய்தார்.

ஸ்வாமி, இவ்விழாவின் செலவிற்கு ரூ. 1000 அதற்குமேல் நன்கொடை கொடுத்த வள்ளல்களின் திருநாமம் செதுக்கப்பட்ட சலவக்கல்லை திறந்துவைத்து அவர்கள் கைங்கர்யத்தைப் புகழ்ந்து பேசினர். அவர்கள் திருநாமங்களாவன ;—

நன்கொடையாளர்கள் திருநாமம் பொறித்த சலவக்கல்

| | ரூ. |
|---|---|
| பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்யரான வானமாமலை ஸ்ரீ ராமாநுஜ ஜீயர் ஸ்வாமி ... ... | ... 3000 |
| ராவ்பகதூர் அல்லத்தூர் நாதமுனி செட்டி சாரிடி, மதருஸ் | ... 1001 |
| மதுசூதன் ட்ரஸ்ட். பம்பாய் (ஸ்ரீ G. D சோமானி மூலம்) | ... 1000 |
| ஸ்ரீ V. S R. சக்கிரவர்த்தி அய்யங்கார், மதருஸ் | .... * 000 |
| குமாரி ஹேம மாலினி, மதருஸ் | .... * 1000 |

[* உடையவர் விக்ரஹத்தில் சேர்க்கப்பட்ட தங்கம் வெள்ளி மதிப் ]

இப்பாறை சன்னிதி சுவரில் யாவரும் பார்க்கக்கூடிய இடத்தில் காட்சி அளிக்கும்படி நிறுவப்படுமென்று ஸ்ரீ ஜீயர் அறிவித்தார். அநுபந்தம் A-I, A-II-வில் List of donors and Receipt & Expenditure Accounts respy. காண்க.

பிறகு, இவ்விழாவிற்கு பெரியோர்கள் அன்புகூர்ந்து அனுப்பிய மங்களாசாஸனங்களையும், ஆசிச் செய்திகளையும் அடியேன் படித்து தெரிவித்தேன். மங்களாசாஸனங்கள் பரமஹம்ஸ பரிவ்ராஜ காசார்யரான வானமாமலை ஜீயர் ஸ்வாமி, பரமஹம்ஸேத்யாதி ஸ்ரீபெரும்பூதூர் பேரருளாள யதிராஜ ராமாநுஜ ஜீயர் ஸ்வாமி, திருக்குறுங்குடி ஜீயர் மடம், ஜகந்நாசார்ய சிம்ஹாசனாதிபதி காஞ்சி. உ.வே P. B. அண்ணங்கராசாரியார் ஸ்வாமி, ஸ்ரீரங்கம் உ.வே. வித்வான் சதாபிஷேகம் கோவிந்த நரசிம்மா

ஸந்தேசங்கள்

சார்ஸ்வாமி, வித்வான் T. A. சம்பத்குமாராச்சார் ஸ்வாமி, M.A., இன்னும் பலரிடமிருந்து வந்திருந்தன. நம் தேசத்தின் ராஷ்ட்ரபதி கனம்பொருந்திய ஸ்ரீ V. V. கிரி, உப ராஷ்ட்ரபதி ஸ்ரீ பாடக் இன்னும்பல உயர்ந்த பதவியிலிருக்கும் தலைவர்களிடமிருந்தும் ஆசிச்செய்திகள் (Messages) வந்தன. (ஸந்தேசங்களை அநுபந்தம் B ல் காண்க.)

ஸ்ரீ வைஷ்ணவ ஸித்தாந்த ஸாரம்

மாமுனிகளின் 6-வது நூற்றாண்டு நிறைவு ஞாபகார்த்தமாக டில்லியில் முதல் தடவையாக எம்பெருமானார் திவ்யமங்கள விக்ரஹப் பிரதிஷ்டை நவம்பர் 1-ம் தேதி நடந்ததை முன்பே குறிப்பிட்டோம். அதுதவிர, உ.வே ஸ்ரீ V. R ஸ்ரீசைல சக்கரவர்த்தியாசாரியர், B.A., B.L., எழுதிய "ஸ்ரீவைஷ்ண சித்தாந்த சாரம்" என்ற க்ரந்தம் அவருடைய திருக்குமாரர் ஸ்ரீ V. S. R. சக்ரவர்த்தியால் புதியதாகப் பதிப்பிக்கப்பட்டு மாமுனிகள் 6-வது நூற்றாண்டுவிழா ஞாபகார்த்தமாக டில்லியில் வெளியிடப்பட்டது. இப் புத்தகத்தின் பெருமையைப்பற்றி மஹா வித்வான் உ.வே. ப்ரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர் ஒரு முன்னுரை எழுதியுள்ளார். இந்த புத்தகத்தை உ.வே. ஸ்ரீ P.V.S. அய்யங்கார் சம்பிரதாயமாக வெளியிட்டு ஸ்ரீவைஷ்ணவ சித்தாந்தத்தின் அடிப்படைகொள்கைகளை விளக்கினார். பாகவதோத்தம அய்யங்காரைப்பற்றி ஒருவார்த்தை. இவர் டில்லியில் ஸ்ரீவைஷ்ணவ சித்தாந்த சபையில் பலகாலம் ப்ரஸிடென்டாயிருந்தவர். சம்பிரதாய கார்யங்களுக்கு பல விதத்திலும் உபகாரம் செய்துகொண்டு வருபவர். டில்லி ஸ்ரீவைஷ்ணவர்களில் மிக வயோவிருத்தரானவர். இவருடைய திருக்கரங்களால் "ஸ்ரீவைஷ்ணவ ஸித்தாந்த சாரம்" என்ற க்ரந்தம் வெளியிட்டது ரொம்ப பொருத்தமானது.

மாமுனிகளின் 6-வது நூற்றாண்டு விழாவை உத்காடனம் செய்து ஸ்ரீமந் நாராயண ஜீயர் மணவாளமாமுனிகளுடைய அஸாதாரண பெருமையைப்பற்றியும் விழாவின் முக்யத்வத்தைப்பற்றியும் பரக்க உபந்யஸித்த அருள்வாக்கிலிருந்து சில பகுதிகளைக் கீழே தருகின்றோம் :—

ஜியரின் தலைமையுரை

"ஸ்ரீமந் நாராயணன் கிருஷ்ணாவதாரம் செய்து—பரித்ராணாய ஸாதூனாம் விநாசாய ச துஷ்கிருதாம்| தர்ம ஸம்ஸ்தாபனார்த்தாய ஸம்பவாமி யுகேயுகே ||—என்றருளின பிரகாரம் பத்து அவதாரங்கள் எடுத்தான். அதில் பூர்ணாவதாரம் மூன்று: நரசிம்மாவதாரம், கிருஷ்ணாவதாரம், ராமாவதாரம் என்பன. இவைகளிலும் ராமாவதாரத்தில் ஜனங்களுக்கு அத்யந்த ப்ரேமம். நம்மாழ்வார் திருவாக்கை நோக்குவோம் :

கற்பாரிராம பிரானையல்லால் மற்றும் கற்பரோ?
புற்பாமுதலாப் புல்லெறும் பாதியொன் றின்றியே
நற்பாலயோத்தியில் வாழும் சராசரம் முற்றவும்
நற்பாலுக்குய்த்தனன் நான்முகனார் பெற்ற நாட்டுளே

ராமபிரான் தன்னடிச்சோதிக்குச் செல்லும்போது எல்லோருக்கும் மோக்ஷம் அளித்

தார். இதுவே இவ்வவதாரத்தின் விசேஷம். கிருஷ்ணுவதாரத்தில் அதிமானுஷ சேஷ்டிதங்களைக் காட்டினுலும், கீதையை அருளியிருந்தாலும் கிருபாவிசேஷம் பண்ணினதாகத் தெரியவில்லை. அவர் சேதன—அசேதனுளுக்கு ராமாவதாரத்தில் போல மோக்ஷம் கொடுத்ததாக ப்ரமாணமில்லை.

"இப்படி பெருமை வாய்ந்த லோக க்ஷேம ராகவஸ்வாமி நம் நூதன சன்னிதியில் கோயில் கொண்டிருப்பது டில்லி ஆஸ்திகர்களின் பாக்கியம்-

"ஸ்ரீ சக்கரவர்த்தி திருமகனை நேற்றைக்கு முன்தினம் பிரதிஷ்டை பண்ணும் போதே கூடவே, ஆசார்ய சார்வபௌமரான பகவத் ராமானுஜரையும் பிரதிஷ்டை செய்தோம். சரித்திர பூர்வமான இன்றைய சம்பவத்திற்கு (மாமுனிகளின் 6-வது நூற்றுண்டு விழாவிற்கு) ராம—ராமாநுஜ பிரதிஷ்டையைவிட ச்ரேஷ்டமான ஸ்மாரகம் என்ன இருக்க முடியும்? நம் யதீந்திரன் திருவடிகளில் யதீந்திர ப்ரவணரும் சேவை சாதிக்கிறுர்!

"ஸ்ரீவைஷ்ணவ சம்பிரதாயத்தில் ஆசாரியன் சேவை சாதிக்காத பெருமாள் சன்னிதியில், விஷயம் தெரிந்த பெரியோர்கள் தீர்த்த பரிக்ரஹம் பண்ணுவதில்லை. ஆகையால் நம் சன்னிதியில் ராமானுசனும்—மணவாளமாமுனிகளும்—சக்ரவர்த்தி திருமகனுடன் பிரதிஷ்டையானது ஒரு ஆவச்யகமான கார்யம்.

"சக்கரவர்த்தி திருமகன் ரங்கநாதனை உபாசனை செய்தார். ரங்கநாதன் மணவாள மாமுனிகளைத் தன் ஆசார்யனுய் வரித்து 'ஸ்ரீசைலேச தயாபாத்திர' தனியன் சாதித்தான். பூர்வாசார்யர்களில் மாமுனி ஒருவருக்குத்தான் இந்த கௌரவம் கிடைத்தது. ஆகையால் ராமன் சன்னிதியில் மணவாள மாமுனிகளை ஏள்ளப்பண்ணினது ரொம்ப பொருத்தமாய் அமைந்தது.

"வரவரமுனிகள் என்ற மணவாள மாமுனிகள் நம் பூர்வாசார்ய பங்க்தியில் கடைசி ஆசாரியர். ராமானுச தர்சனத்தை ஆங்காங்கு பரவச்செய்யவே தன் வாழ்நாள் பூராவையும் அர்ப்பணம் செய்த உத்தமராவர். அவரிடத்தில் ஞான மனுஷ்டானம் இரண்டும் பரிபூர்ணமாக இருந்ததே அவருடைய ஆசார்யத்வத்தின் விசேஷம்.

"மணவாள மாமுனிகள் ராமானுசனுடைய அபராவதாரம் என்பதே நமது கொள்கை.

"வேதத்தை ஒத்துக்கொள்ளாதவர்களையும், அல்லது வேத வாக்கியங் களுக்கு அபார்த்தம் சொல்லுகிறவர்களையும் பிரம்ம சூத்திர பாஷ்யத்தில் வாய் திறக்க வொட்டாமல் செய்ததே ராமானுசன் செய்த சேவையில் சிகரம் போன்றது. ஆகையால் அவரை வாழ்த்தும்போது—

அறுசமயச் செடியதனை யடியறுத்தான் வாழியே
அடர்ந்துவரும் குதிட்டிகளை யறத்துறந்தான் வாழியே
செறுகலியைச் சிறிதுமறத் தீர்த்துவிட்டான் வாழியே
* * * *

என்றும்,

சங்கரபாற்கர யாதவபாட்டப் பிரபாகரர் தங்கள்மதம்
சாய்வுறவாதியர் மாய்குவரென்று சதுமறை வாழ்ந்திடுநாள்

என்றும் புகழ்கிறோம்.

"எம்பெருமானுர் சம்ஸ்கிருத வேதத்திற்கு ஆற்றின தொண்டை அவரே மணவாள மாமுனியாக அவதாரம் செய்தபோது தமிழ் வேதத்திற்கு ஆற்றினுர். தமிழ் வேதத்திற்கும் சம்ஸ்கிருத வேதத்திற்குமுள்ள ஒற்றுமையை வற்புறுத்தி, புரியாத வேதத்தை புரியச்செய்யும் திவ்ய பிரபந்தங்களை ஆண், பெண், ஜாதி, மதம் வித்யாசமின்றி யாவரும் உஜ்ஜீவிக்குமாறு பரவச்செய்த பெருமை மாமுனியைச் சேர்ந்தது.

"ராமாநுஜர் பிரம்ம சூத்திரத்திற்கு விசிஷ்டாத்வைத பரமாக பாஷியம் அருளினுர். மாமுனிகளும் ரஹஸ்ய கிரந்தங்களுக்கு நிகரற்ற வியாக்யானங்கள் எழுதி நம் பூர்வாசார்யர்களின் உபதேசங்களை சரியானபடி விளங்கவைத்து சாதாரண ஜனங்களும் உஜ்ஜீவிக்க வழிகோலினுர்.

"மாமுனிகள் வைத்துச் சென்றிருக்கும் ஞானமாநிதி ஒரு ஜாதிக்கோ, ஒரு சார்பாருக்கு மட்டுமோ சொந்தமன்று. மனிதசமூகம் முழுவதற்கும் உரித்தானது. இம்மாபெரும் ஆசார்யனைப் பின்பற்றுவதனுல் மனித சமூகத்திற்கு க்ஷேமம் சித்திக்கும்." (கரகோஷம்)

இப்படி மணவாள மாமுனிகளின் 601-வது திருவவதாரோத்ஸவத்தை உத்காடனம் செய்த பரமஹம்ஸேத்யாதி ஸ்ரீமந் நாராயண ஜீயர் ஸ்வாமி தலைமையுரையை வெகு அழகாக ஆற்றினுர்.



உபந்யாஸ கோஷ்டியின் ஒரு பகுதி

பிறகு பால பண்டிதமணி ஸ்ரீரங்கம் திருமலாச்சாரியர் "மாமுனிகள் பாஷ்யகாரர் அபராவதாரம்" என்பதைப்பற்றிப் பல சான்றுகளுடன் உபந்யாஸம் செய்தார்.

மணவாள மாமுனிகளுக்கு ஸ்ரீராமன்—உடையவர் இவர்களுடைய பரிவட்டம், மாலை முதலிய மரியாதைகளுடன் மங்களாசாஸனம் நடந்தது. பிறகு சாத்துமுறை, பிரஸாத விநியோகம் இத்துடன் இன்றைய விசேஷ திருவவதார உத்ஸவம் குதூகலமாய் முடிந்தது.

அன்றிரவே டில்லி A I Radio ஸ்ரீ ஜீயரின் ப்ரவசனத்தின் ஒரு பகுதியையும், விழாவின் விமர்சனத்தையும் News Reel-ல் ஒலிபரப்பினது ஒரு விசேஷம்.

அடுத்த ஒன்பது நாள் உத்ஸவத்தின் தினப்படி நிகழ்ச்சி நிரல் பின்வருமாறு அமைந்தது :—

| | | | |
|---|---|---|---|
| மாலை | 4 மணி | ... | திவ்ய பிரபந்த சேவை, வேதபாராயணம். |
| ,, | 6-45 மணி | .... | பால பண்டிதமணி ஸ்ரீரங்கம் திருமலாச்சார் ஸ்வாமியின் உபந்யாஸம். |
| ,, | 8 45 மணி | ... | சாத்துமுறை, தீர்த்தப் பிரஸாதம். |

கன்னடத்தில் உபதேசரத்தினமாலை

நவம்பர் 11-ம் தேதி ஒரு விசேஷ நிகழ்ச்சி நடந்தது. டில்லி யூனிவர்சிடியில் கன்னட பாஷை பேராசிரியராயிருக்கும் டாக்டர் (குமாரி) விநோதா அவர்கள் உபதேசரத்தினமாலையை கன்னடத்தில் காவ்யமாக அநுவாதம் செய்திருந்ததை மாமுனிகள் 6-வது நூற்றாண்டு நிறைவுவிழா ஞாபகார்த்தமாக பிரசுரிக்கப்பட்டது. அதை மத்திய கவர்ன்மென்ட் உப-மந்திரியாயிருக்கும் டாக்டர் ஸ்ரீமதி சரோஜினி மஹிஷி சாம்பிரதாயமாக வெளியிட்டார். அச்சமயம் அவர்கள் உபதேசரத்தின மாலையின் ஆழ்ந்த கருத்துக்களை விளக்கிப்பேசினர்.

பெருவிழாவின் சாத்துமுறை

நவம்பர் 13-ம் தேதி மஹாசார்யன் மணவாள மாமுனிகளின் 6-வது நூற்றாண்டு நிறைவுவிழா சாத்துமுறை தினம். அன்று கவர்மென்ட் விடுமுறையாதலால் கோயிலில் கூட்டம் கேட்கவே வேண்டாம். காலை சுப்ரபாதத்திற்குப் பிறகு, நித்ய திருவாராதனம் முடிந்ததும் பெருமாள்—உடையவர்—மாமுனிகள் எல்லோரும் திருமஞ்சனம் கண்டருளினர். பிறகு விசேஷ அலங்காரங்கள் சாத்தப்பட்டு சீதா சமேத ராமசந்திரன் ஆசார்யர்களுக்கு மங்களாசாஸனம் செய்தார்.



விசேஷ அலங்காரத்துடன் ஸ்ரீ சீதாசமேத ராமசந்திரன்.



திருமலாச்சார் ஸ்வாமி உபந்யாசம் செய்கிறுர்

அச்சமயம் பால பண்டிதமணி திருமலாச்சார் ஸ்வாமி 'பூர்வாசார்ய வைபவம்' என்பதைப்பற்றி வெகு அழகாக உபந்யாஸம் செய்தார்.

டில்லியில் மணவாள மாமுனிகள் அர்ச்சாரூபியாய் திருவவதாரோத்ஸவம் கண்டருளுவது இதுதான் முதல் தடவை ஆகையால் உத்ஸவத்தில் அந்வயிக்க அநேகமாக எல்லா ஸ்ரீ வைஷ்ணவ பக்தகோடிகளும் குடும்ப சமேதராய் எழுந்தருளியிருந்து சேவை சாத்துமுறையில் கலந்துகொண்டனர்.



சாத்துமுறையன்று அத்யாபக கோஷ்டி (ஒரு பகுதி)

சேவைசாதிப்பவர்கள் : ஸ்ரீ K. R. ராஜகோபாலாச்சார், P. K. வீரராகவாச்சார், P. N. கிருஷ்ண ஸ்வாமி அய்யங்கார், வித்வான் S. ஸ்ரீனிவாசய்யங்கார், E. வைகுண்டம் அய்யங்கார், R. T. கிருஷ்ணய்யங்கார், மைலாப்பூர் T. சுந்திரராஜமய்யங்கார்.

தீர்த்தப் பிரஸாதங்கள் பெற்று சன்னிதியிலிருந்து திரும்பும்போது "மஹாசாரியர் மணவாள மாமுனிகள் ஆருவது நூற்ருண்டு நிறைவு சம்பவத்தின் சாச்வத ஞாபகார்த்தமாக நம் சக்கரவர்த்தி திருமகன் சன்னிதி ஸ்தாபனமும், அதிலும் ஆசார்ய பிரதிஷ்டையும் நடந்தது பரமஹம்ஸேத்யாதி ஸ்ரீமந் நாராயண ஜீயரின் தபோபலமே! இவ்வுத்ஸவத்தை சேவிக்கக் கொடுத்துவைத்த நாம் பாக்ய சாலிகளே!" என்று பலரும் பக்தி மிகுதியால் ஆனந்தக் கண்ணீர் வடித்து வாய் விட்டுச் சொன்ன சொற்கள் இன்னும் காதில் ஒலித்துக்கொண்டிருக்கின்றன.

சுபமஸ்து.

அடியார்கள் வாழ அரங்க நகர்வாழ
சடகோபன் தண்தமிழ் நூல்வாழ—கடல்சூழ்ந்த
மன்னுலகம் வாழ மணவாள மாமுனியே
இன்னுமொரு நூற்ருண்டிரும்.



புது டில்லி ஸ்ரீராம மந்திர் திருக்கோயிலில் எம்பெருமானுருக்கு திருவவதாரோத்ஸவம் கடந்த சித்திரையில் 10 நாட்கள் விமரிஸையாக நடந்தது. திருவாதிரையன்று ஸ்ரீரங்கம், தோதாத்ரி, திருநாராயணபுரம், டில்லி வெங்கடாசலபதி சன்னிதி—இன்னும் பல திவ்ய தேசங்களிலிருந்து மாலை, பரிவட்டம் முதலிய மரியாதைகள் வந்தன. வாகாமுருதவர்ஷி ஸ்ரீ உ வே K. வரதாச்சார் ஸ்வாமி 10 நாட்களும் உபந்யாஸம் செய்தார்.

☆

சாத்துமுறையன்று பெரிய மாலையுடன் சேவை சாதிக்கிருர் டில்லி எம்பெருமானுர்

# மாமுனிகள் தமிழ்க்குச் செய்ததொண்டு

(காஞ்சி. ஸ்ரீ ப்ர. ப அண்ணங்கராசாரியர் ஸ்வாமி)

மணவாளமாமுனிகளை மாமுனியென்றே பெரும்பாலும் வழங்கி வருகிருர்கள் குலசேகராழ்வார் தமது (பெருமாள்) திருமொழியில் அகஸ்த்ய முனிவரைக் குறிக்கவேண்டுமிடத்து "வண்டமிழ் மாமுனி" என்கிருர். தமிழ்த் தெய்வமான அகஸ்த்யமுனிவரே மணவாளமாமுனிவராகத் திருவவதரித்தார் என்கைக்கு மிக்க பொருத்தங்களுள்ளன. இம்மாமுனிவர் முந்தின அவதாரத்தில் பூர்த்தியாக வடமொழி மாமுனியாகவே யிருந்து, தமிழ்கலசாத வடமொழி மயமாகவே நூல்களை இயற்றினுர். அக்காலத்திற்கு அவ்விதமான தொண்டு அவசியமாக இருந்தது. அப்போது அவரை (ஸ்ரீராமாநுசரை)ப் பாடிய திருவரங்கத்தமுதனுர் "சொல்லார் தமிழொருமூன்றும் சுருதிகள் நான்கும் எல்லையில்லாவறநெறியாவும் தெரிந்தவன்" என்று தமிழ்ப்புலமைத் தலைமையையே அவர்க்கு நிரூபகமாக முந்துறமுன்னம் பாடினர். ஆனுல் அப்போது அப்புலமையைப் புத்தக ரூபமாக வெளியிட நேர வில்லை. ஆனுலும் "தமிழ்மறைகளாயிரமும் ஈன்ற முதல்தாய் சடகோபன், மொய்ம் பால் வளர்த்த இதத்தாய் இராமாநுசன்" என்றபடி தமிழ் வேதமாகிய திருவாய் மொழியை வளர்த்த தாய் என்று பேர்பெற்றுர்.

அவ்வளவால் திருப்தி யடையாததனுல் அந்த ராமாநுசர் தாமே மீண்டும் மணவாள மாமுனிகளாகத் திருவவதரித்துத் தமிழ்மொழிக்கே அஸாதாரணமாகத் தொண்டுசெய்தருளினர். தமிழ்மொழியில் கவிகளை இயற்றினவர்களெல்லாரும் தமிழ்க்குத் தொண்டு செய்தவர்களாக ஆகார்கள். அரும்பெரும் நூற்கடற் பொருள்களை முத்தும் மணியும் வயிரமும் நன்பொன்னுமாக வெடுத்துச் செய்யுள் நடையிலும் வசனநடையிலும் உலகுய்ய உதவிபுரிந்தவர் மணவாளமாமுனிகளொருவரேயாவர்.

இவரருளிய உபதேசரத்தினமாலை, திருவாய்மொழி நூற்றந்தாதி, ஆர்த்திப் பிரபந்தம் என்னும் மூன்று நூற்களும் செய்யுள் நடையிலமைந்தவை. இவற்றுள் இடைப் பிரபந்தமாகிய திருவாய்மொழி நூற்றந்தாதியானது இந்நிலவுலகில் இதுகாறும் தோன்றியுள்ள தமிழ்நூற்களெல்லாவற்றினுள்ளும் உயர்பதவியில் திகழத் தக்கது. திகழுமது. தமிழ்க்கு இது மிகப்பெரிய தொண்டு.

தவிர, மாமுனிகள் தமிழில் அருளிய வியாக்கியான நூல்கள் வடமொழி வேதவேதாந்த நூற்பொருள்திரள்களைக் கொண்டவையாதலால் வடமொழியில் அமையவேண்டியிருந்தும் தமிழ்மொழிக்குத் தொண்டு செய்வதற்கென்றே தோன்றிய அவதாரமாதலால் எங்குங் கண்டுங் கேட்டுமறியாத தமிழ்நடையில் அந்த வியாக்கியான நூல்களை அமைத்தருளியிருப்பது ஆழ்ந்து நோக்குமவர்களுக்கு மிக அதிசயிக்கத்தக்கதேயாம். மிக விரித்துரைக்கவேண்டிய விஷயமிது.

அநுபந்தம் A—I

# SIXTH BIRTH CENTENARY COMMITTEE OF MANAVALAMAMUNI, NEW DELHI, 1970

## List of donors who paid Rs. 100 or more.

| | | | Rs. |
|---|---|---|---|
| His Holiness Sri Vanamamalai Ramanuja Jeer Swami, Nanguneri | | ... | 3000 |
| Sri Rao Bahadur Allathoor Nathamuni Chetty Charities, Madras | | ... | 1001 |
| Sri Madhusudan Trust, Bombay through Shri G D. Somani | | ... | 1000 |
| Sri V. S. R Chakravarti, Madras | | ... | *1000 |
| Kumari Hema Malini, Madras | | ... | *1000 |
| Paramartha Bhushanam Sri Nathella Sampathu Chetty, Madras | | ... | °500 |
| Messrs Sundaram Charities, Madras | | ... | 500 |
| Upputhur Alwar Chetty Charities, Madras | | ... | 250 |
| Sri Justice R L. Narasimhan | New Delhi | ... | 100 |
| Sti Justice A Alagiriswami, | ,, | ... | 100 |
| Sri Justice T. V. R. Tatachari | , | ... | 100 |
| Sri K. R. Rajagopalan | ,, | ... | 201 |
| Sri P. V. S Iyengar, | ,, | ... | 150 |
| Sri R. Venkatesa Iyengar, | ,, | ... | 101 |
| Sri R. Parthasarathy Gandhi Centenary Committee) | ,, | ... | 101 |
| Sri K. Padmanabhan | ,, | ... | 101 |
| Prof. K. V. Raghavachariar | ,, | ... | 101 |
| Sri P. K. Veeraraghavan | ,, | ... | 101 |
| Sri R. Santanam, Kidwai Nagar, | ,, | ... | 100 |
| Dr. (Miss) Vinodha, Delhi University | ,, | ... | 100 |
| Sri A. Ramanujachari, N. Delhi (now at Madras) | | ... | 101 |
| Sri N. S. Rajagopalan | New Delhi | ... | 100 |
| Sri R. K. Chari | ,, | ... | 100 |
| Sri A. S. Ragunathan | ,, | ... | 100 |
| Sri P. N. Krishnaswami | ,, | ... | 100 |
| Sri A. K. Snndararajan | ,, | ... | 100 |
| Sri A. K. Narayanan | ,, | ... | 101 |
| Sri A. Ramanujam | ,, | ... | 101 |
| Sri K. S. Anantachari | ,, | ... | 100 |
| Sri R T. Krishna Iyengar | ,, | ... | 100 |
| Sri T G. Saranathan | , | | 100 |
| Sri K. Rangaswami | , | ... | [illegible] |
| Sri V. P. Narasimhan | ,, | ... | 100 |
| Sri S. Krishnaswami | ,, | | [illegible] |
| Srf A. Rajagopalan | ,, | ... | 100 |
| Sri R. T. Iyengar, Defence Colony | ,, | ... | 100 |

* Value of Gold and Silver added to the Panchaloha vigraham of Emberumanar

° Value of Gold coated silver Mudaliandan.

N B —மேலே குறிப்பிட்ட நன்கொடையாளர் யாவரும் கமிட்டி மெம்பராக கருதப்பட்டனர்.

அநுபந்தம் A—II

## Receipt and Expenditure Account of the Sixth Birth Centenary Celebrations of Shri MANAVALAMAMUNIGAL, NEW DELHI, 1970.

### RECEIPTS

| | Rs. | P. |
|---|---|---|
| 1. Donation in cash ... | 11,499 | 20 |
| 2. Collections from monthly Tirunakshatram Celebrations conducted during the year including Mahalakshmi Archana ... | 1,011 | 88 |
| 3. Receipts from donation for Lakshmi padakkam ... | 700 | 00 |
| 4. Receipts from Manavala Mamui padakkam (donated by Sri Nathella Sampathu Chetty, Madras) ... | 250 | 00 |
| 5. Bank Interest ... | 5 | 70 |

### EXPENDITURE

| | Rs. | P. |
|---|---|---|
| 1. Expenses on monthly Tirumoolam functions (1970) .... | 335 | 25 |
| 2. Donation to the Book-Project of Sri P. B Annangaracharya Swami ... | 1,000 | 00 |
| 3 Cost of Ramanuja's Vigraham (excluidng gold and silver and Mudaliandan)* ... | 4,847 | 90 |
| 4. Expenses for prasadams during the Festival ... | 899 | 10 |
| 5. Cost of Mangalagiri advanced to Sri C. Radhakrishniah, Madras ... | 1,000 | 00 |
| 6 Sambhavanai to Swamis for discourse, etc. ... | 1,350 | 50 |
| 7. Tent hire .... | 536 | 00 |
| 8. Printing, Postage and Stationery. | 1,332 | 65 |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| | | 9. | Cost of Marble plaques ... | 338 | 44 |
| | | 10. | Cost of printing the Kannada version of Upadesaratnamala ... | 585 | 00 |
| | | 11. | Bank charges ... | 10 | 75 |
| | | 12. | Miscellaneous expenses ... | 964 | 70 |
| | | 13. | Balance † .... | 266 | 49 |
| 134,66 | 78 | | | 13,466 | 78 |

Andited and found correct—

V. S Chellappa, *Auditor.*

E. Vaikuntam, *Treasurer.*

A. Ramanujachari, *Convener.*

P. V. S Iyengar, *Vice-President.*

* Gold and silver worth about Rs. 2000 was added to the Vigraham by Shri V. S R Chakravarthi, at the time of casting.

Also Mudaliandan costing a little over Rs. 500 was donated by Shri Nathella Sampathu Chetty.

† The amount is being transferred to Sri Ram Mandir account.

## அநுபந்தம் B.
## ஸந்தேசங்கள் (Messages)

ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்யோபய வேதாந்த ப்ரதிஷ்டாபனாசார்யராய்......
ஸ்ரீ பகவத் ராமானுஜ ஸித்தாந்த நிர்த்தாரகாசார்ய ஸார்வபௌமராய், ஸர்வதந்த்ர
ஸ்வதந்த்ரராய் எழுந்தருளியிருக்கும்

### ஸ்ரீ வானமாமலை ராமானுஜ ஜீயர் ஸ்வாமியின் மங்களாசாஸனம்

* * * *

இப்பவும் நம் பாரததாட்டின் ப்ரதான ராஜதானியான டெல்லி மாநகரத்தில், ஸ்ரீ பாஷ்யகாரருடைய அபராவதாரமான மணவாள மாமுனிகளின் அறுநூருவது ஆண்டு திருவவதார மஹோத்ஸவத்தைச் சிறப்பாக நடத்த ஏற்பாடுகள் செய்து ஸ்ரீ எம்பெருமானுர் திவ்யமங்கள விக்ரஹம் எழுந்தருளப்பண்ணி பிரதிஷ்டா மஹோத்ஸவமும் நடக்கிறதை தெரிந்து, ரொம்பவும் சந்தோஷித்து, இந்த சபை மேன்மேலும் வளர்ந்து, நம் ஸ்ரீ வைஷ்ணவ சம்பிரதாயம் தழைத்தோங்கி வளரும் படிக்கு கிருபை செய்தருளவேணும் என்று இவ்விடம் ஸ்ரீதோதாத்ரி நாதன் சன்னிதியிலும் நம் அரங்கநகரப்பன் சன்னிதியிலும் பிரார்த்தித்து மங்களாசாஸனம் செய்கிரோம்.

1146-ம் ஞூ<br>அற்பசிமீ 23உ<br>9—10—70

திருமலை, திருப்பதி, திருநின்றவூர் தேவஸ்தானங்களின் தர்மகர்த்தா
ஸ்ரீமத் பரமஹம்ஸ அப்பன்

### ஸ்ரீரங்கராமாநுஜ பெரிய ஜீயர் ஸ்வாமி மங்களாசாஸனம்

* * * *

ஸ்வாமி எம்பெருமானுர் டில்லி எழுந்தருளினுர் என்பது ஏட்டுச் சுரைக்காயாக ஆகாமல் தேவரீர் போல்வார், ப்ரத்யக்ஷமாக சேவிக்கும்படி சன்னிதி கட்டி எம்பெருமானுரை கண்ணுரக் கண்டு களிக்கும்படி செய்து, உலகத்தாருக்கு பெரிய உபகாரம் செய்திருக்கிறது. ஷெ சன்னிதியும் தேவரீர் முதலான பக்தவர்க்கங்களும் பல்லாண்டு அபிவிருத்தராய் வாழ வேண்டுமென்று அலர்மேல் மங்கை மணுளன் அடிக்கீழ் அமர்ந்து புகுந்து ஒழிவில் காலமெல்லாம் பிரார்த்திக்கிறேன்.



வேணும் அநேக மங்களாசாஸனம்.

His Holiness

## Sri Perarulala Ethiraja Ramanuja Jeeyar Swami,

Religious Dharmakartha, Sri Adikesava Bhashyakara Devasthanam,
Sriperumbudur.

* * * *

One of my great dreams which I cherished for over 25 years while I was in Delhi, viz., that a shrine for Ramanuja be erected in Delhi, has been realised and I am fortunate to live today to see it.

* * * *

Emberumanar was connected with the Ruler of Delhi thousand years ago and in honour of this a Delhi Festival is conducted every year in Sriperumbudur

It is needless for me to say about the great sacrifices which our revered Sri Sriman Narayana Ramanuja Jeeyar Swami has made to achieve this end

* * * *

My blessings to the whole congregation on behalf of Ramanuja at Boothapuri.

### திருக்குறுங்குடி மடம்

• • • •

ஸ்ரீ எம்பெருமானுர் விக்ரஹப் பிரதிஷ்டை விஷயமாக........வந்த செய்திகளைப் பார்த்து மிக்க ஸந்தோஷமடைந்தோம். ...... மடத்தின் உபகாரம் தக்க சமயத்தில் அனுப்பப்படும். • • •

(Sd.) திரு. நாராயணன்,
திரு. ஜீயர் மடம், திருக்குறுங்குடி.

## ஸ்ரீ ஜகதாசார்ய ஸிம்ஹாஸனாதிபதி காஞ்சி ப்ரதிவாதிபயங்கரம் அண்ணங்கராச்சாரியர் ஸ்வாமி ஸந்தேசம்.

---

நமது பூருவாசாரியர்களை இருவகுப்பாகப் பிரிக்கலாம். (1) தமது காலத்தில் சீடர்களுக்கு உபதேசம் செய்வதோடு மட்டும் நின்றவர்கள். (2) உபதேசமும்செய்து நீண்டகாலம் விளங்கக்கூடிய நூல்களையும் அருளிச்செய்து வைத்தவர்கள். இவ்விரு வகுப்பினருள் உய்யக்கொண்டார், மணக்கால்நம்பி, பெரியநம்பி, திருக்கோட்டியூர் நம்பி, எம்பார் போல்வார் உபதேசத்தோடு நின்றவர்கள். ஆளவந்தார், எம்பெருமானார், ஆழ்வான், பட்டர், நம்பிள்ளை, பிள்ளை லோகாசாரியர், மணவாளமாமுனிகள் போல்வார் உபதேசங்களுஞ் செய்து ஓங்கு புகழ் பெற்ற நூல்களையும் அருளிச்செய்து வைத்தவர்கள்.



கடந்த மார்ச்சுமீ ஸ்ரீ P. B. A. ஸ்வாமியின் சதாபிஷேகம் டில்லியில் ஸ்ரீராம மந்திரில் குதுகலமாய் கொண்டாடப்பட்டது அச்சமயம் ஸ்ரீ ஜஸ்டிஸ் A. அழகிரிஸ்வாமி அவர்கள் ஸ்ரீ அண்ணங்கராசாரியருக்கு பொன்னுடை போர்த்து அஞ்சலி செலுத்தினர்.

உபயவேதாந்த ப்ரவர்த்தகர்களென்று ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு வழங்கிவரும் விருதை முதன் முதலாக இட்டருளினவர் நாதமுனிகளோ அல்லது ஆளவந்தாரோ அறியோம். எம்பெருமானார் எனினும் ஒக்கும். உபய வேதாந்தங்களில் திராவிட வேதாந்தத்தையே வலக்கண்ணுகக் கொண்டவர்கள் நமது பூருவாசார்யர்களனை வரும். அன்னவர்களில் தலைவரான ஸ்வாமி யெம்பெருமானார் ஸகலவிதமான ஸம்பிரதாயார்த்தங்களையும் ஸ்ரீ பாஷ்யம் கீதாபாஷ்யம் முதலான ஸம்ஸ்க்ருத நூல்களினுல் மட்டும் அருளிச்செய்து வைத்து, அருளிச்செயல்களின் வியாக்கியான ப்ரவசன முகத்தாலும், ரஹஸ்யார்த்த விவரண முகத்தாலும் விசேஷித்த பிரசாரங்களைச் செய்வதற்கென்றே அவர்தாமே மணவாள மாமுனிகளான திருக்கோலத்துடன் வந்து திருவவதாரம் செய்தருளினுரென்பது பலவகைகளினுலும் அறுதி

யிடக்கூடியதாகவுள்ளது. இதை என்னுடைய பல நூற்றுக்கணக்கான நூல்களில் விவரித்திருக்கிறேன். இன்னமும் விவரித்துவருகிறேன்.

உபய வேதாந்தங்களிலும் திரண்ட சீரிய பொருள்களை நாம் இக் கடல் சூழ்ந்த மண்ணுலகில் மணவாளமாமுனிகளின் திவ்ய ஸூக்திகளினுல் மட்டுமே அறியவல்லோமென்பது அபிமானுேக்தியன்று. ஸந்தேஹவிபர்யயங்களற உணர்த்தும் நூல்களை வேறு ஒருவரும் உபகரிக்கவில்லை.

இம்மஹாசார்யனின் 6-வது நூற்றண்டு நிறைவு விழாவை கொண்டாடுவது நமது கடமை. இப்புனித சரித்திர பூர்வமான உத்ஸவத்தில் பங்கெடுத்துக் கொண்ட டில்லி ஸ்ரீவைஷ்ண சிகாமணிகளுக்கு அநேக மங்களாசாஸனம்.

---

உ.வே. வித்வான் திருமலை அனந்தாண்பிள்ளை சதாபிஷேகம்

**கோவிந்த நரஸிம்ஹாச்சார்ய ஸ்வாமி ஸ்ரீரங்கம், அவர்களுடைய ஸந்தேசம்.**

* * * *



தேவர் பரமஹம்ஸேத்யாதி ஸ்ரீமந் நாராயண ராமானுஜ ஜீயர் ஸ்வாமி தலைமையில் கொண்டாட விருக்கும் வைபவத்தை மானஸிகமாகவே இங்கிருந்து அனுபவிக்கிறேன். ப்ரயத்னங்கள் யாவும் நிர்விக்னமாக, சீக்கிரமாக, பரிஷ்காரமாக பலிக்க வேணுமாய் பெரிய பெருமாள் ஸ்ரீரங்க நாச்சியார் திருவடிகளில் பிரார்த்தித்து மங்களாசாஸனம் பண்ணுகிறேம். ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி ஸ்ரீ ஸ்ரீமந் நாராயண ராமாநுஜ ஜீயர் ஸ்வாமியை அடியேன் தண்டம் ஸமர்பித்ததாகத் தெரிவிக்க வேணும்.



## PRESIDENT'S MESSAGE



राष्ट्रपति भवन, नई दिल्ली-4.
RASHTRAPATI BHAVAN,
NEW DELHI-4.

October 31, 1970.

I am glad to know that the Sixth Birth Centenary of Shri Manvala Mamunigal, the renowned Srivaishnavite Acharya of the Ramanuja School, is being celebrated in New Delhi. I wish the celebrations every success.

V. V. Giri

VICE-PRESIDENT
INDIA
NEW DELHI
November 11, 1970

I am glad to know that the Six hundredth birthday of Sri Manavala Mahamuni is being celebrated this month by the Vedic Culture Centre, New Delhi. Sri Manavala Mahamuni was one of the eminent Sri Vaishnavite Acharyas who propagated the Divyaprabandams and commentaries of earlier acharyas I hope the celebrations will enable the dovotees to pay their homage to this saint and to imbibe the great ideals preached and practised by him.

I wish the concluding function to be held on the [illegible]th all success

G. S. Pathak

(G. S. Pathak)

## அநுபந்தம் C-I

## SOME PRESS REPORTS ABOUT THE FUNCTIONS IN SRI RAMA MANDIR, NEW DELHI.

'Sunday Standard',
New Delhi, dt. 1—11—1970

### Sri Mamunigal Centenary

(By Our Staff Reporter)

New Delhi, Oct 31

The highlight of 13-day celebrations of the sixth centenary of Sri Manavala Mamunigal which will begin here tomorrow is the presentation of an idol of Sri Ramanuja, the first Vaishnavite Acharya

The celebrations have been organised by a special committee of which His Holiness Sri Narayana Ramanuja Jeeyar of Badrinath is the President. They will include daily discourses by Sri U. V. Tirumalacharya Swami of Srirangam and Vedaparayanam.

The committee has announced that the celebrations will be held at Sri Rama Mandir, Lodi Road. Tomorrow the Badrinath Jeeyar will consecrate the deities of Sri Rama, Lord Hanuman and the Navagraha (idols of the nine planets) at the Mandir.

### Deities consecrated at new Temple

New Delhi, Nov. 1. (UNI) The deities of Rama, Hanuman and Navagrahas were consecrated at the new Ram Mandir in Lodi colony here today.

The Union Minister for Information and Broadcasting, Mr. Satyanarayana Sinha and Dr. K. L. Rao, Minister of State for Irrigation and Power, also attended the function.

The whole consecration ceremony lasting over four hours took place under the guidance of Swami Narayana Ramanuja Jeeyar.

Addressing the congregation Mr. Satyanarayana Sinha emphasised the value of temples and religious institutions for the spiritual upliftment of man and decried those who ran down idol-worship. For the ordinary citizen, idol-worship was an obvious means of augmenting his spiritual strength. though saints and seers might try other forms of self realisation, he added.

Thousands of devotees, mostly South Indians in the capital had thronged to witness the consecration.

'Hindu' dated 17—11—70

## RAMANUJA SHRINE FOR NEW DELHI

FROM OUR SPECIAL CORRESPONDENT

NEW DELHI, Nov. 16.

The sixth birth centenary of Sri Manavala Mamunigal was celebrated in New Delhi.

The highlight of the two-week celebrations was the presentation of a vigraha of Sri Ramanuja by the celebrations Committee, headed by his Holiness Sri Sriman Narayana Ramanuja Jeer to the Vedic Cultural Centre for installation in the Sri Rama Mandir.

The vigraha, which is a replica of the one in Sriperumbudur Temple, has been installed with the blessings of the Vanamamalai Math Jeer. A big shrine is proposed to be built in the capital as a fitting memorial to Sri Ramanuja. Mr Vasudev Somani laid the foundation for it.

During the celebrations, two books, "Srivaishnava Siddhantam" in Tamil by Sri V R Srisaila Chakravarthi of Coimbatore and 'Upadesa Rathnamalai" in Kannada, were released. The Kannada book is a translation of Manavala Mamunigal s work by Dr. (Miss) Vinoda of the Delhi University. Sri Thirumalachariar of Srirangam gave discourses on all the days. Mr Justice R. L. Narasimhan inaugurated the discourse series.

---

'Hindu' dated 26—3—71.

## SCHOLAR HONOURED

NEW DELHI, March, 26.

Sri Prativadi Bhayankaram Annangaracharya Swami was honoured at a function in Rama Mandir in New Delhi on Sunday. His 81st birthday falls this month, and in celebration of that, Mr Justice Alagiriswami, on behalf of the Rama Navami Celebrations Committee, presented him a 'ponnadai' and a purse, and wished him many more years of service to the community.

Mr. Justice R. L. Narasimhan, Vice-President of the Sri Ram Mandir, welcomed the Swamiji. Sri Annangaracharya inaugurated the Sri Rama Navami festival with a discourse on "Rama Gunanubhavam" Mr. Ramanujachari, Secretary of the Mandir proposed a vote of thanks —FOC



## டில்லியில் மணவாளமாமுனிகள் திருவவதாரோத்ஸவ வைபவம் (1971)

பரமஹம்ஸேத்யாதி ஸ்ரீ ஸ்ரீமந் நாராயண ராமாநுஜ ஜீயரால் புதுடில்லியில் கடந்த வருஷம் ஸ்தாபிக்கப்பட்ட ஸ்ரீராம மந்திர் திருக்கோயிலில் மாமுனிகளின் திருநட்சத்திரோத்ஸவம் இவ்வருடம் (1971) அக்டோபர் 24-ம் தேதியிலிருந்து 10 நாட்கள் வெகு விமரிசையாக நடந்தேறியது. காலையில் திருமஞ்சனம், சேவை சாத்துமுறை, சாயங்காலம் நியாய வேதாந்த வித்வான் ஸ்ரீ உ.வே. பிள்ளைலோகம் பாஷ்யகார் ஸ்வாமியின் ப்ரவசனம், விசேஷ ப்ரஸாத விநியோகங்கள் என்ற அடைவில் தினப்படி நிகழ்ச்சி நிரல் அமைந்திருந்தது. முன்னாள் ஜட்ஜு ஸ்ரீ ஜஸ்டிஸ் R L நரசிம்மன் அவர்கள் உத்ஸவத்தை ஸம்ஸ்க்ருத சொற்பொழிவுடன் துவக்கிவைத்தார். சாற்றுமுறை தினமான நவம்பர் 2-ந்தேதி டில்லி ஹைகோர்ட் ஜட்ஜு ஸ்ரீ ஜஸ்டிஸ் T. V. R. தாதாசாரியார் ஸ்ரீ பாஷ்யகாரர் ஸ்வாமிக்கு பொன்னாடை போர்த்து சன்மானம் வழங்கி கௌரவித்தார். அச்சமயம் சுமார் ஆயிரம் பக்தகோடிகள் கோஷ்டியில் அந்வயித்தது குறிப்பிடத்தக்கது. விழா வெகு சிறப்பாக நடந்ததற்கு ஸ்ரீ E. வைகுண்டமய்யங்கார் முதலான ஆஸ்திக பெருமக்களின் சலியாத உழைப்பு காரணமாகும்.

---

## மணவாள மாமுனிகளின் 6-வது நூற்றாண்டு பூர்த்திவிழா

(40-ம் பக்கத் தொடர்ச்சி)

முன் பக்கங்களில் டில்லி, மதருஸ் நகரங்களில் மாமுனிகளின் ஆறுவது நூற்றாண்டு நிறைவு விழாவின் விவரம் கொடுத்துள்ளோம். இந் நகரங்களைத் தவிர. ஸ்ரீரங்கத்தில் கோயில் மணவாள மாமுனிகள் சன்னிதியில் யதிராஜவிம்சதி. உபதேசரத்தினமாலை முதலான, ஸ்வாமியின் பத்யரூபமான பிரபந்தங்களை சலவைக் கல்லில் பொறித்தும், ஸ்ரீரங்கத்தில் மாமுனி சன்னிதி ஜீர்ணோத்தாரணம் செய்தும், திருவயிந்திரபுரத்தில் திருவாய்மொழி மண்டபம் நிர்மாணித்தும், காஞ்சியில் தேவப்பெருமாள் சன்னிதியில் கோயில் கொண்டிருக்கும் மணவாளமாமுனி சன்னிதி விமான ஜீர்ணோத்தாரணத்திற்கு ஏற்பாடு செய்தும், ஸ்ரீபெரும்பூதூரில் முதலியாண்டான், எம்பார் இவர்களுடைய அவதாரஸ்தல மூர்த்திகளை ஸ்ரீபெரும்பூதூருக்கு எழுந்தருளச்செய்து அவர்களோடும் கூரத்தாழ்வானோடும், மாமுனிகள் எம்பெருமானாரை மங்களாசாஸனம் செய்தும் விழா விமரிசையாக நடந்தேறியது.

பம்பாய் விருந்தாவனம் முதலிய வடநாட்டு க்ஷேத்திரங்களில் உத்தராதி ஸ்ரீவைஷ்ணவர்கள் அதிகமாக கலந்துகொண்டு உத்ஸவத்தைச் சிறப்பிக்கச் செய்தது குறிப்பிடத்தக்கது.

பம்பாயில் ஸ்ரீப்ரதிவாதிபயங்கரம் ஜகத்குரு (வைகுண்டவாஸி) அனந்தாசாரியார் ஸ்வாமியால் ஸ்தாபிக்கப்பட்ட ஸ்ரீ வெங்கடேச தேவஸ்தானத்தில் 1970-ம் வருஷம் ஜூன் 11 ந்தேதியிலிருந்து 10 நாட்கள் "ஈடு உத்ஸவம்" நடத்தி 600-ஆண்டு நிறைவு விழாவை உத்காடனம் செய்தனர். கூடவே ஸ்ரீ P. B. A. ஸ்வாமிபோன்ற வித்வான்களுடைய வியாசங்கள் அடங்கிய ஒரு சிறப்பு மலரையும் வெளியிட்டனர்.

விருந்தாவனத்தில் ஆதி ஸ்ரீகோவர்த்தனம் ரங்காச்சாரியார் ஸ்வாமியால் நிர்மாணிக்கப்பட்ட கோதை-ரங்கமன்னார் சன்னிதியில் ஆசார்ய சார்வபௌமரின் 6-வது நூற்றாண்டு பூர்த்தி விழாவைப் பத்து நாட்கள் விசேஷ நிகழ்ச்சிகளுடன் 'ந பூதோ ந பவிஷ்யதி' என்னும்படி வ்ரஜவாஸிகள் கொண்டாடின வைபவம் வாசாமகோசரம். இச் சரித்திரபூர்வமான சம்பவத்தின் சாச்வத ஞாபகார்த்தமாக வரவரமுனிகளின் கராஞ்சலிக்கும் த்ரிதண்டத்திற்கும் பக்தகோடிகள் வைர கவசங்கள் சமர்ப்பிக்க ஏற்பாடு செய்துள்ளனர்.

சுபமஸ்து.

---

# ஆழ்வார்திருநகரியில் மாறன் உபயவேதாந்த பாடசாலே

நல்லார்நவில் குருகூரென்று ப்ரதமப்ரபந்தமான திருவிருத்தத்தில் நம்மாழ்வாரால் புகழப்பெற்ற திருக்குருகூரில் உபயவேதாந்த வித்யாபிவிருத்தி ஏழெட்டு வருஷகாலமாக மிகவும் சிறப்புற நடைபெற்றுவருகின்றது. உபயுக்த வேதபாகங்கள் திவ்யப்ரபந்தங்கள் ஸ்தோத்ர பாடங்கள் இவை ஏறக்குறைய அறுபது வித்யார்த்திகளுக்குக் கற்பிக்கப்பட்டு வருவதை அடியேன் சென்ற ஸம்வத்ஸரத்தில் கண்ணாரக் கண்டு அநுபவித்துக்களித்தேன். "ஆரம்பசூராः கலு தாக்ஷிணாத்யாः" என்கிறபடியல்லாமல் ப்ரவர்த்தகர்கள் மிக்க ச்ரத்தையோடு அரும்பாடுபட்டு நடத்தி வருவதால் ஓங்கும் புகழுடனே உயர்த்திபெற்று நடந்துவருகின்றது. ஸன்னிதி முன்னணியில் ஒரு மஹா மண்டபத்தில் பாடசாலே நடந்து வருகின்றது. இங்குக் காட்சிதரும் கோஷ்டியில் அந்வயித்திருக்கின்றவர்களெல்லாரும் வித்யார்த்திகளே. மூலதனமொன்றுமில்லாமல் யாசக வ்ருத்தியிலேயே நடத்தப்பட்டு வரும் இப்பாடசாலேக்கு ஆஸ்திக தனிகர்கள் இயன்றவுதவி புரியவேணும். ஆழ்வார்திருநகரி வடக்கு ரதவீதியில் ஸ்ரீமத் பெரியநம்பி திருமாளிகையில் இதன் கார்யாலயமுள்ளது. பொருளுதவிபுரிய விரும்புமவர்கள் அவ்விடத்திற்கனுப்பலாம்.



# "நிறை குடம்"

(அருங்கலைக்கோன். வித்வான். டாக்டர் N. ஸுப்பு ரெட்டியார், M.A., திருப்பதி, எழுதுகிறார்)

திருமலை திருப்பதி. கேந்த்ரீய ஸம்ஸ்க்ருத வித்யாபீடம் Principal, ஸ்ரீமதுபயவே V. S வேங்கடராகவாசாரியர் ஸ்வாமி இங்கு ஸேவை ஸாதிக்கின்றார். இந்த ஸ்வாமியின் பாண்டித்ய விசேஷத்தையும் பெரும்புகழையும்பற்றி இங்குச் சுருக்கமாகத் தெரிவிக்கிறோம்.



விழுப்புரத்தின் அருகிலுள்ள வேங்கடாத்ரியகரம் என்கிற அக்ரஹாரம் பல பல பண்டிதர்களைத் தோற்றுவித்த ஊர். அங்குத் தோன்றியவர் நம் ஸ்வாமி. திருவையாற்றுக் கல்லூரியில் ஏழாண்டு கல்வி பயின்று 1930-ஆம் ஆண்டில் மீமாம்ஸா சிரோமணி பட்டம் பெற்றார். அதன்பிறகு தனியாக ஆங்கிலம் பயின்று 1949ல் B.A., B.T., பட்டம் பெற்றார். மீண்டும் வடமொழி பயின்று B.O.L , M.A. பட்டங்கள் பெற்றார்.

## — ஆசிரியருடைய அநுபவங்கள் —

சென்னையிலுள்ள இராமகிருஷ்ண வித்யாலயங்களில் 1930ஆ ஜூன் முதல் சமஸ்கிருத ஆசிரியராகப் பணியாற்றியவர்; 1947-இலிருந்து சென்னை விவேகானந்தா கல்லூரியில் பேராசிரியராகப் பணிபுரிந்து பி.ஏ , எம்.ஏ., மாணவர்கட்கு சமஸ்கிருத இலக்கண இலக்கியங்கள், சாஸ்திரங்கள் போதித்தவர். 1962 செப்டம்பர் முதல் மத்திய அரசு நிறுவிய திருப்பதி கேந்திரீய ஸமஸ்கிருத வித்யா பீடத்தில் பணியாற்றி வருபவர். சமஸ்கிருத பண்டிதர்க்கு சமஸ்கிருதம் பயிற்றுவிக்கும் துறைத் தலைவராக இருந்து இதுவரை 400 பண்டிதர்களைப் பயிற்றுவித்து "சிக்ஷா சாஸ்திரி" என்ற பட்டங்கள் வழங்கக் காரணமானவர். இவர்மூலம் சமஸ்கிருதம் M.A பட்டம் பெற்றவர்கள் 60க்கு மேல்; சிக்ஷா சாஸ்திரி பட்டம்பெற்றவர்கள் 400 பேர். இந்த 42 ஆண்டுக் காலத்தில் 10 ஆயிரத்திற்குமேல் இவரிடம் பயின்றவர்கள் உளர். "குலபதி" என்ற விருதுக்கு அருகதை யுள்ளவர்.

## — இவர் இயற்றிய நூல்கள் —

(1) 1953—காளிதாசரின் 'ரகுவம்சம்' முழுவதற்கும் எளிய நடையில் பதவுரை, கருத்துரை, விசேட உரையுடன் தமிழில் வெளியிட்டுள்ளார். இந்த முயற்சியைப் பாராட்டி காஞ்சி காமகோடிபீட ஜகத்குரு ஸ்ரீசங்கராசாரிய சுவாமிகள் விலையுயர்ந்த சாதராவை அளித்தார் (நூல் வெளியீட்டு விழாவின்பொழுது)

(2) "குமாரசம்பவம்"—இந்நூலுக்கும் இம்மாதிரியே பதவுரை முதலியன எழுதி வெளியிட்டார்.

வேறுநூல்கள் பல இவர்கள் வெளியிட்டாலும் இவை இரண்டும் குறிப்பிடத் தக்கவை.

(3) 1968-ல் "பாரதீயம் வ்ருத்தம்" இது மொழிபெயர்ப்பு நூல் (வடமொழியில்). இது ஆக்ஸ்போர்டு பல்கலைக்கழகத்தில் ஸமஸ்கிருத பேராசிரியராக இருந்த 'மக்டானல்' என்பவரால் எழுதப்பெற்ற 'இந்தியாவின் பழமை' என்ற ஆங்கில நூலின் வடமொழி பெயர்ப்பு;

(4) "சிக்ஷா மனோ விக்ஞானம்" (1971இல்) இது மனோதத்துவ நூல். மேனாட்டவர் மனோ தத்துவத்தைக்குறித்து எழுதியுள்ள கருத்துக்களையும், நம் நாட்டு சாஸ்திரக்காரர்கள் மனம்பற்றிக் கூறும் கொள்கைகளையும் சேர்த்து சுதந்திரமாக தெள்ளிய சமஸ்கிருதத்தில் எழுதப்பெற்ற நூல் இது.

(5) "போலி வைத்யர்" என்ற தலைப்பில் பிரான்ஸ் நாட்டு மாலிவ் என்ற ப்ரஹஸன ஆசிரியர் எழுதிய நூலை (நாடகம்) "வைத்ய பந்து" என்ற பெயரில் மொழிபெயர்க்கப் பெற்றுள்ளது.

(6) ஸ்ரீமாந் வேங்கடராகவாசாரியார் திருத்தகப்பனார் ஸ்ரீநிவாஸ வரதாசாரியார்; அவருடைய தந்தையார் ஸ்ரீநிவாஸராகவாசாரியார்; அவர் தந்தையார் ஸ்ரீ சேஷாத்ரியாசாரியார். வேங்கடவன் பெயரோடு இயைந்த பெயரையே வைத்துக்கொள்ளுவது இவர்களின் குலவழக்கம் என்பதாகக் கேள்வியுற்றேன்.

(7) வடமொழி பயின்ற பலரிடம் தமிழறிவு காண்பது அரிது. இவரோ தீந்தமிழில் பேசவும் எழுதவும் வல்லவர். ஒருமுறை ராஜாஜி அவர்களே இவரது தமிழறிவை மெச்சினதாக அறிகிறேன்.

(8) வடமொழி அறியாதவர்களும் புரிந்துகொள்ளும்வண்ணம் நல்ல சமஸ்கிருதத்தில் ஹாஸ்யத்துடன் பேசி கேட்போரனைவரையும் ஈர்க்கும் ஆற்றல் இவரிடம் இயல்பாகவே அமைந்து கிடக்கின்றது.

(9) சிறந்த ஆசான். மனோதத்துவ வல்லவரான இவருக்கு போதிக்கும் ஆற்றல் எளிதாகக் கைவந்த வித்தை. ஆழ்ந்த சமஸ்கிருத ஞானமும் இத்துடன் சேர்ந்து இவரை "உண்மை ஆசான்" ஆக்கியது.

(10) எவருடனும் எளிதாகப் பழகும் இயல்பினர்; இன்முகத்துடன் உரையாடும் பண்பினர். அடக்கமே உருவான நிறைகுடம். பதவிச் செருக்கோ புலமைச் செருக்கோ இவரிடம் மருந்துக்கும் அகப்படாது. President தரும் Awardக்கும் அருகதையுள்ளவர் என்று சொல்லின் அது மிகையன்று. (பத்மஸ்ரீ போன்ற பட்டங்கட்கும், உபகாரச் சம்பளத்திற்கும்)

## — பாராட்டு —

இருமுறை காஞ்சி காமகோடிபீட ஸ்ரீ சங்கராசாரியாரின் பாராட்டுகள் பெற்றவர். அண்மையில் "ஸாஹித்ய வல்லப" என்ற விருது பெற்றதை நாம் அறிவோம். ஸ்ரீமத் ஆசாரிய சுவாமிகளிடம் விருதுபெறுவது எளிதன்று. பல முறையும் புடம்போட்டு சோதித்து பின்பே பிருதுதந்து கௌரவிக்கும் தன்மையுடையவர் ஸ்ரீ சுவாமிகள் என்பதை நாம் அறிவோம்.

---

# ஸ்ரீ உ. வே. P. B. அண்ணங்கராசாரியார் இயற்றிய உரை நூல்களுக்குச் சுருக்கமான ஜாபிதா.

திவ்யப் பிரபந்த திவ்யார்த்த தீபிகையென்னும் விரிவுரையானது நாலாயிரத்திற்கும் ஸ்ரீ ஸ்வாமிகள் இயற்றியது உலகம் பரவியுள்ளது (பதவுரை, கருத்துரை, விசேஷவுரை)

---

## முதலாயிரம்

(எல்லாம் திவ்யார்த்ததீபிகையுடன்)

| | ரூ. | பை. |
|---|---|---|
| திருப்பல்லாண்டும் பெரியாழ்வார் திருமொழியும் | 6 | 00 |
| திருப்பாவை | 1 | 50 |
| சங்கத்தமிழ்மாலை முப்பது, திருப்பாவை ஜீயர் இவை | 2 | 50 |
| திருப்பல்லாண்டு முதல் நாச்சியார் திருமொழிவரை எளியவுரை | 3 | 60 |
| நாச்சியார் திருமொழி தீபிகை | 2 | 50 |
| பெருமாள் திருமொழி தீபிகை | 2 | 00 |
| திருச்சந்த விருத்தம் தீபிகை | 3 | 00 |
| திருமாலை, திருப்பள்ளியெழுச்சி, அமலனாதிபிரான், கண்ணிநுண் சிறுத்தாம்பு தீபிகை | 4 | 00 |

## இரண்டாவதாயிரம்

| | | |
|---|---|---|
| பெரிய திருமொழியாயிரம் திருக்குறுந் தாண்டகம், திருநெடுந்தாண்டக முட்பட (புதிய பதிப்பு) | 28 | 50 |

## மூன்றாவதாயிரம்

| | | |
|---|---|---|
| (இயற்பா) முதல்திருவந்தாதி முதலாக இராமாநுச நூற்றந்தாதி வரை திவ்யார்த்ததீபிகை | 18 | 00 |

## நான்காவதாயிரம்

| | | |
|---|---|---|
| திருவாய்மொழியாயிரம் தீபிகை | 31 | 00 |
| நித்யாநுஸந்தானவுரை | 5 | 00 |
| திவ்யப்ரபந்தக் கண்ணாடி | 1 | 00 |
| ஆழ்வார்களுகந்த இராமன்; ஆழ்வார் களுகந்த கண்ணன் | 1 | 00 |
| உபதேசரத்தினமாலை, திருவாய்மொழி நூற்றந்தாதி ஆர்த்திப் பிரபந்தம் இவற்றின் உரை | 3 | 00 |
| ஞானஸாரம், பிரமேயஸாரம், ஸப்த காதை இவற்றின் உரை | 1 | 00 |

## ஸகலபூர்வாசார்ய ஸ்தோத்ரங்களுக்கு உரைகள்

| | ரூ. | பை. |
|---|---|---|
| முகுந்தமாலை, ஸ்தோத்ர ரத்னம், சதுச்லோகி | 2 | 50 |
| கத்யத்ரயம் | 2 | 00 |
| ஸ்ரீவைகுண்டஸ்தவம் | 2 | 50 |
| ஸுந்தர பாஹுஸ்தவம் | 2 | 50 |
| அதிமாநுஷஸ்தவம் | 2 | 50 |
| வரதராஜஸ்தவம், ஸ்ரீஸ்தவம் | 3 | 00 |
| ஸ்ரீரங்கராஜஸ்தவம் பூர்வசதகம் | 2 | 50 |
| ஷை உத்தரசதகம் | 2 | 50 |
| அஷ்டச்லோகி | 1 | 00 |
| ஸ்ரீகுணரத்நகோசம் | 2 | 00 |
| யதிராஜவிம்சதி, நக்ஷத்ர மாலிகை முதலான 16 ஸ்தோத்திரங்கள் உரை | 3 | 50 |
| ஸுதர்சந சதக வியாக்கியானம் | 4 | 00 |

## ஆழ்வாராசார்யப் பெருமை நூல்கள்

| | | |
|---|---|---|
| ஆழ்வார்களின் வைபவம் | 1 | 00 |
| பூர்வாசார்ய ப்ரபாவம் | 2 | 00 |
| வேதாந்த தேசிக வைபவம் | 1 | 00 |
| மணவாளமாமுனிகள் வைபவம் | 1 | 00 |
| ஐப்பசித் திருமூல மலர்கள் | 2 | 00 |
| நவரத்ன நவநிதி | 2 | 00 |

## ரஹஸ்யார்த்த விளக்க நூல்கள்

| | | |
|---|---|---|
| முமுக்ஷுப்படி ஸாரமென்கிற திருமந்த்ர-த்வய-சரமச்லோகார்த்த விவரணம். | 2 | 00 |
| தத்வத்ரயஸாரம் | 2 | 00 |
| ஸ்ரீவசநபூஷணஸாரம் | 3 | 00 |
| ஆசார்யஹ்ருதயஸாரம் 1, 2 ப்ரகரணம் | 4 | 00 |
| 3. 4 பிரகரணம் (அச்சில்) | | |

வேதாந்தப் பொருள் விளக்க நூல்கள் முதலானவற்றுக்கு விரிவான கியாடலாக் காண்க.

## P. B. அண்ணங்கராசார்ய ஸ்வாமிகளின் நூல் துறைகள்.

1. நாலாயிர திவ்யப்பிரபந்தவுரைகள்
2. பூர்வாசார்ய தமிழ்ப்பிரபந்தவுரைகள்
3. ஸகல பூர்வாசார்ய ஸ்தோத்ரவுரைகள்
4. ஆழ்வாராசார்யப் பிரபாவ நூல்கள்
5. இதிஹாஸ புராண சரித்திர நூல்கள்
6. ரஹஸ்யார்த்த விளக்க நூல்கள்
7. வேதாந்தப் பொருள் விளக்கநூல்கள்
8. வேதலக்ஷணவிசார நூல்கள்
9. ஸத்ஸம்ப்ரதாயார்த்த விளக்க நூல்கள்
10. லோகாபிராம உபந்யாஸ நூல்கள்
11. பரபக்ஷப்ரதிக்ஷேப நூல்கள்
12. உபந்யாஸக ஸௌபாக்ய வெளியீடுகள்
13. வடமொழி நூல் திரள்கள்
14. ஹிந்தீ பாஷையில்
15. தெலுங்கு பாஷையில்
16. பூர்வாசார்ய க்ரந்த வெளியீடுகள்

விரிவான லிஸ்டுகளைத் தருவித்து விவரங்காண்க.

If un-delivered please return to:

**P. B. ANNANGARACHARYA,**
**KANCHEEPURAM-3.**

Edited and Published by P. B. Annangaracharya Swami
for Madras Sathgrantha Prakasana Sabha.

Printed by T. A. P. Srinivasavaradan at Sri Venkateswara Press,
Sannidhi Street, Kancheepuram-3.